# எக்ஸ்ட்ரா குரோயிங் பவர் இப்போது

**1 கிலோ சூப்பர் சேவர் பேக்கிலே**

சேமிப்பீர் ரூ. 25*






தேர்ந்தெடுக்கப்பட்ட பெருநகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.

* இரண்டு 500 கிராம் காம்ப்ளான் சாக்லேட் ரீஃபில் பேக்குகளுடன் ஒப்பிடுவதன் பேரில்.

*Heinz 485/97 TAM*

தன் தியாகத் தன்மைக்கு ஓய்வூதியம் வழங்காத அரசுக்கு எதிராக அரசு செலவிலேயே வழக்குத் தொடுத்து, (இலவச சட்ட ஆலோசனை) அரசு ஜீப்பையே (தாசில்தார்) ஜப்தி செய்யச் சொல்லி கோர்ட் உத்தரவு பிறப்பிக்குமளவுக்குத் தமது பிரச்னையை விஸ்வரூபமாக்கியுள்ளார் இந்த 75 வயதுப் பெரியவர். இது நடந்தது ஈரோடு - பவானி முனிசீஃப் கோர்ட்டில்...



# சுதந்தரத்துக்குப் போராடியவர் பென்ஷனுக்கும் போராடுகிறார்!

"செய்த சேவைக்கு ஊதியம் கேட்பதில் எனக்கு மட்டுமல்ல - சிறந்த சுதந்தரப் போராட்ட தியாகியான என் தந்தைக்கும்கூட, உடன்பாடு இருந்ததில்லை. ஆனால் சுதந்தரப் போருக்குத் தங்களை அர்ப்பணித்த குடும்பங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகை... மொழிப்போர் தியாகிகள் என்ற பெயரில் யார் யாருக்கோ போய்ச் சேருவது கண்டு வெகுண்டுதான் இத் தியாகி பென்ஷனுக்கே விண்ணப்பித்தேன்...!"

– என்று கூறும் பி.வி. சீனிவாசன் ஈரோடு மாவட்டம் பவானியைச் சேர்ந்தவர். தள்ளாமையிலும் படு சுறுசுறுப்பு. தம் 28 வயதில் வெண்குஷ்டம் தாக்கியதில் இவர் உற்சாகம் இழந்து விடவில்லை.

தனி நபர் சத்யாக்ரகம், கள்ளுக் கடை மறியல், அன்னியத் துணி பகிஷ்கரிப்பு என தம் தந்தையாரோடு 14 வயதிலிருந்தே சுதந்தரப் போரில் ஈடுபட்டாராம். 1944-ல் பிட் நோட்டீஸ் விநியோகித்தற்கு வேலூர் ஜெயில் வாசம்; கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து அறப்போர் நடத்தினதில் சிறை என்று இவர் அனுபவித்திருந்தாலும் அதற்கு சிறை ஆதாரம் ஏதும் தாம் வைத்துக் கொள்ளவில்லை என்கிறார்.

படிப்பு அந்தக் கால எட்டாம் வகுப்பு. கையில் ஏராளமாகப் பழுப்புக் காகிதங்கள். இரண்டு மகன்கள், மூன்று மகள். பிறருக்குப் பலவிதமான விண்ணப்பங்கள் எழுதிக் கொடுத்துக் காசு பார்க்கிறார். நம்முடன் உரையாடும்போதும் புள்ளி விவரங்களோடு பேசுகிறார்.

"காமராஜர் முதலமைச்சரா இருந்தப்ப சில தியாகிங்க போய் பென்ஷன் கேட்டதுக்கு, 'ஏய்யா, பணத்தை எதிர்பார்த்தா ஜெயிலுக்குப் போனீங்க'ன்னு வெடுக்குனு கேட்டனுப்பினார். எல்லாம் இந்த தி.மு.க. வந்த பின்னாலதான்... மொழிப்போர் தியாகின்னு அவங்க ஆளுகளுக்கு ஏதோ பண்ணனும்ன்னு எங்களையும் இணைச்சு பென்ஷன் அறிவிச்சாங்க...

"குறைஞ்சது ஆறு மாதம் ஜெயில்ல இருந்திருக்கனும்... அவுங்கதான் பென்ஷனுக்குத் தகுதியானவங்கன்னு அறிவிச்ச அரசு, காலப் போக்குல அதை மூணு மாசமா குறைச்சது.

● அம்மா கொஞ்சம் ஆடித்தான் போயிருக்கிறாராம். காரணம் டிட்கோ பங்குகள் விற்பனை விவகாரத்தில் ஊழல் நடந்திருப்பதை உறுதிப்படுத்தி, அதற்கு அவரைப் பொறுப்பாக்கி, உயர்நீதி மன்றம் வழங்கியுள்ள அதிரடி தீர்ப்புத்தான். இதனால் ஆதாயம் அடைந்த தொழிலதிபரை அழைத்த ஜெ., ''என்ன செய்வீர்களோ தெரியாது. தேசிய மற்றும் தமிழ்நாட்டு நடுநிலை நாளிதழ்கள் இந்த விஷயத்தில் under play செய்ய வேண்டும். இல்லாவிட்டால் தேர்தலின்போது இது பூதாகரமாக ஆக்கப்படும். என் மீது போட்டிருப்பதெல்லாம் பொய் வழக்கு என்று நான் சொல்வது அடிபட்டுவிடும்'' என்று கடுகடுத்தாராம். இப்போது தொழிலதிபரின் தொடர்பு அதிகாரிகள் பல பத்திரிகை அதிபர்களின் வீடுகளுக்கும், பல பத்திரிகை ஆபீஸுகளுக்கும் படையெடுத்துக் கொண்டிருக்கிறார்களாம். ''அப்பீலுக்குப் போக இருக்கிறோம். அதனால் பெரிது படுத்தாதீர்கள்!'' என்று வேண்டுகோளும் வைக்கிறார்களாம்.

● அ.தி.மு.க. – பா.ஜ.க. கூட்டு உருவாகிவிட்டது என்று தெரிந்த அன்று மாலை தமிழ்நாடு காங்கிரஸ் அலுவலகத்தில் தங்கபாலுவின் தளபதிகளின் கூட்டம். ஓர் இறுக்கமான சூழ்நிலை. ''எங்கள் செயற்குழுவில் பலர் பேசும்போது தனித்தே போட்டியிடலாம்!' என்ற சொன்னார்கள். இப்போது அந்த நிலைக்குத் தள்ளப்பட்டு இருக்கிறோம்!'' என்றார் ஒருவர். ஆனால் தேர்தல் கூட்டணி ஒரு பக்கம் இருக்க, தங்கபாலு தரப்பு சந்தோஷமாக இருக்கக் காரணம் இருக்கிறதாம். அதிருப்தியாளர்களாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த பிரபு, அன்பரசு, ஆகியோருக்கு இனி போக்கிடம் (புகலிடம்) கிடையாது என்பதுதான். அதற்குக் காரணம், ''இனி வாழப்பாடி காங்கிரஸினர் உள்ளே வருவதற்கு வாய்ப்புக் கிடையாது. ஆகவே, இன்னமும் சில காலத்துக்குத் தலைவரை அசைக்க முடியாது'' என்று ஒருவர் பெருமைபட்டுக் கொண்டார். மூப்பனார் தயவின்பேரில் த.மா.கா., ஒன்றிரண்டு இடத்தைக் கடைசி நேரத்தில் காங்கிரஸுக்கு விட்டுக் கொடுக்கலாம் என்ற நப்பாசையும் இருக்கிறது

# ஆடிப்போயிருக்கும் அம்மா!

---

அதோட சிறையிலிருந்த அத்தாட்சி (சிறைக் குறிப்பிலிருந்து) வேணும்ன்னு நிபந்தனை. அந்தக் காலத்துல ஒரு மாசம், பதினைந்து நாள்னு ஜெயில்ல இருந்த எனக்கு எந்த ரெக்கார்டும் கெடைக்கல. இந்த நிலைமையிலதான் எம்.ஜி.ஆர் அரசு 'அரசியல் தியாகிகள் மூன்று வாரம் சிறையிலிருந்திருந்தாலும் அல்லது போராட்டத்தில் உடல் உறுப்பு பழுது பட்டிருந்தாலும் 'பென்ஷன்' பெறத் தகுதியுள்ளவர் என உத்தரவு பிறப்பித்தது. அதற்குச் சிறை ஆதாரம் தேவையில்லை. அவருடன் சிறையிலிருந்த எம்.எல்.ஏ, எம்.பி(தியாகிகள்) பரிந்துரைத்தாலே போதும் என்றது உத்தரவு.

"அப்போது தற்செயலாக என்னைப் பார்த்த பழம் பெரும் தியாகி பி.எஸ். லட்சுமிபதி – (என்னுடன் ஜெயிலில் இருந்து வகுப்பு எடுத்தவர் – பழனி எம்.எல்.ஏ) இந்த விவரம் சொல்லி எனக்காகப் பரிந்துரைத்ததோடு விண்ணப்பத்தையும் அவரே அரசுக்கு அனுப்பினார்...

"ரொம்ப நாள் கழித்து ஆதாரம் இல்லை என திரும்பி வந்தது. அது திரும்பி வரவும்தான் எனக்குள் ஒரு கோபம். சென்னை இலவச சட்ட ஆலோசனை குழுவிற்கு மனு செய்தேன். அது என் வயது, உடல் நலம் உத்தேசித்து பவானி கோர்ட்டிலேயே வழக்கு நடத்த ஏற்பாடு செய்தது. 1933-ல் எனக்கு சாதகமாய் கோர்ட்டில் தீர்ப்புக் கிடைத்தது. பிறகு ஒன்றே கால் வருடமாகியும் இதற்கு அரசிடம் பதிலில்லை. மறுபடியும் கோர்ட்டுக்குப் போனேன். வரவேண்டிய பென்ஷன் தொகை எவ்வளவு எனக் கணக்கிட்டு வரச் செய்து அதற்கேற்ற மாதிரி அரசு ஜீப்பை ஜப்தி செய்

சிலருக்கு.

● அ.தி.மு.க. – பா.ஜ.க. கூட்டணி காங்கிரஸில் மட்டுமல்ல; சகல கட்சி களிலும் அதிர்வு அலை களை உண்டாக்கி இருக் கிறது என்பது நிஜம். 'அது நடந்தே விட் டதா' என்பதுதான் தி.மு.க.வினர் கேட் டது. "இனி எங்களுக்கு பிரசாரம் சுலபம். அவர் களின் சந்தர்ப்பவாதக் கூட்டு எங்கள் நட்பை இன்னமும் இறுக்கிவிடும்' என்று தி.மு.க. – த.மா.கா. இருதரப்பிலும் சொல்கிறார் கள். "பா.ஜ.க. மட்டும்தான் மதவாதக் கட்சியா? முஸ்லீம் லீக் மதவாதக் கட்சியில் லையா; வாஜ்பாய் போன்ற நல்ல மனிதர் பிர தமர் ஆவதற்கு ஆதரவாக இருக்கக் கூடாதா? பா.ஜ.க. தீண்டத்தகாத கட்சியல்ல என்று கலைஞர் கூட சொன்னாரே" என்று வை.கோ. வின் நெருங்கிய சகா ஒருவர் கேட்கிறார். ஆனால் இந்த கூட்டணியால் மாவட்டங்களில் இருக்கும் கணிசமான வாழப்பாடி ஆதரவாளர் கள், த.மா.வுக்கோ காங்கிரஸுக்கோ போய் விடக்கூடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. அ.இ.அ.தி.மு.க.விலும், அங்கொன்றும் இங் கொன்றுமாகப் பிரமுகர்கள் இந்த கூட்டணி யைக் கண்டித்து விலகக்கூடும்'' என்பது அம்மா வட்டாரத்துக் கணிப்பு.

● பணியில் இருக்கும் போலீஸ்காரர்களின் அதிருப்தி காரணமாக விபரீதமாகச் செயல் பட்டார்கள் என்பது கோவை ரிப்போர்ட்.



ஆனால் பணியில் இருக் கும்போது கலவரம், வீரப்பனுடன் மோதல், குண்டு வெடிப்பு, மற்றும் இயற்கை யாக மரணம் அடைந்த போலீஸ்காரர்களின் குடும்பங்களிலும் புயல்வீசிக் கொண் டிருக்கிறது. இதற்குக் காரணம் டி.ஜி.பி. அலு வலகத்தில் காட்டப்படும் சுணக்கம்தான்'' என்கிறார்கள். "இறந்தவரின் வாரிசுக்கு உடனே வேலை கொடுக்க வேண்டும். ஆனால் முதல்வர் அலுவலகத்தில் கிளியர் செய்து விட்டாலும், டி.ஜி.பி. ஆபீஸில் உள்ள மெத்தனம் காரணமாக நானூறுக் கும் மேற்பட்ட போலீஸ் குடும்பங் கள் வேலையின்றித் தவிக்கின்றன. எத் தனையோ முறை நேரிடையாக முறையிட்டும் பலனில்லை'' என்று மிக்க வருத்தத்துடன் சொன்னார் பாதிக்கப்பட்ட குடும்ப உறுப்பினர் ஒருவர்.

— திலீப்பா

யச் சொல்லி நீதிபதி உத்தரவிட்டிருக்கிறார்.

"அதன் பிறகு அதற்கு ஈரோடு செசன்ஸில் அரசு இடைக்காலத் தடைக்கு முயன்று முடியாமல் போனது. அரசு ஹைகோர்ட்டில் ஸ்டே வாங்க முயற்சி செய்தபோது அங்கும் அது தள்ளுபடியாக இப்போது கீழ் கோர்ட் உத்தரவிற்கு மறுபடியும் உயிர் வந்து விட்டது. கோர்ட்டுக்கு நடந்தே வயதாகி விட்டது... பென்ஷனும் கிடைத்தபாடில்லை... ஜீப் ஜப்தி யும் நடந்தபாடில்லை... ஏதாவதொரு வாய்தா வில் கண்டிப்பாக நல்லது நடக்கும்..." – என் கிறார் மிகுந்த நம்பிக்கையோடு.

இது குறித்து கலெக்டர் அலுவலகத்தில் கேட்டபோது விவரம் மறுக்கப்பட, ஜப்திக் குரிய ஜீப் உள்ள வட்டாட்சியர் அலுவலகத் திலுள்ள சிலரிடம் விசாரித்தோம்.

"அவரிடம் போதுமான ஆதாரம் இல்லை. யாரோ சிலர் பரிந்துரைத்த விண்ணப்பத்தை அங்கீகரித்தால் இதைக் காரணம் காட்டி இவர் பின்னால் ஏராளமானவர்கள் வருவார்களே. (பவானியில் மட்டும் இது மாதிரி 60 பேராம்) அப்போது அரசாங்க கஜானாவின் கதி...? என்னாவது?" என்றார்கள்.

மேலும் இந்தக் குறிப்பிட்ட வழக்கின் தீர்ப் புக்கு இரண்டாவதாக ஒரு ஸ்டே பெட்டிஷன் ஹைகோர்ட்டில் உள்ளதாகவும்... அதுபற்றி விவரம் அறியாமலே லோக்கல் முனிசிப் கோர்ட் ஜப்தி உத்தரவு போட்டு விட்ட தாகவும் இப்போது அது கோர்ட்டுக்கு தெரி யப்படுத்தப்பட்டு ஜப்தியை நிறுத்தி வைத் துள்ளதாகவும் பல தகவல்கள்!

படம், சந்திப்பு: கா.சு. வேலாயுதன்

# "எங்கள் கேப்டன் எனக்குக் கடவுள் மாதிரி..."

**முத்தையா முரளிதரன். இலங்கை கிரிக்கெட் அணியின் சுழற்பந்து வீச்சாளர். உலக கிரிக்கெட் அரங்கில் இடம் பெற்றுள்ள ஒரே (இலங்கைத்) தமிழர். அண்மையில் இவரைப் பெங்களூரில் சந்திக்க நேர்ந்தபோது, ரொம்பவும் காஷுவலாகப் பேசினார். தமிழில் எழுதப் படிக்கத் தெரியாது என்றாலும் நன்றாகப் பேசுகிறார். ஜெயசூர்யா போலவே இவரும் தமது கேப்டனை 'எங்கள் தலைவர், எங்கள் தலைவர்' என்றுதான் குறிப்பிட்டாரே தவிர, தப்பித் தவறிக் கூட 'ரணதுங்கா' என்று சொல்லவேயில்லை...**

**கல்கி** : உங்களுடைய பந்து வீச்சு, பிறருடையதைப் போல் அல்லாமல் சற்று வித்தியாசமாக இருப்பது ஏன்?

**முரளிதரன்** : உண்மைதான். ஒரு விபத்து காரணமாக எனது தோள் பட்டையில் ஓர் அறுவைச் சிகிச்சை நடைபெற்றது. அதனால்தான் சற்று மாறுபட்டுப் பந்து வீசுகிறேன். 95 - 96ல் ஆஸ்திரேலியாவுக்கு நாங்கள் விளையாடச் சென்றபோது, எனது பந்து வீச்சைப் பார்த்த ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்கள், நான் பந்தை 'பௌலிங்' செய்யவில்லை; வெறுமனே 'throw' தான் செய்கிறேன் என்று புகார் செய்தனர். இதை நம்பிய ஆஸ்திரேலிய அம்பயர்களும் நான் பந்து வீசுவதைக் கிட்டத்தட்ட தடையே செய்து விட்டனர். எனது கிரிக்கெட் வாழ்க்கையே முடிந்து போய்விட்டது என்று நான் கவலைப்பட்டேன். ஆனால் எங்கள் அணியின் தலைவரும் அரவிந்த் டிசில்வாவும் அப்போது கிரிக்கெட் ஆட்டத்தைத் தொலைக்காட்சியில் நேர் முக வர்ணனை செய்து கொண்டிருந்த ரவிசாஸ்திரி, காவஸ்கர் ஆகியோரிடம் எனது பந்து வீச்சைப் பற்றி விளக்கமாக எடுத்துச் சொன்னார்கள். அவர்களும் உலக கிரிக்கெட் சங்கத்திடம் எடுத்துச் சொல்ல, எனது பந்து வீச்சை சோதித்துப் பார்த்தனர். உலகப் புகழ் பெற்ற இடது கை சுழற்பந்து வீச்சாளரான ரிச்சி பெர்னார்டு நான் பந்து வீசும் முறை சரியானதுதானே தவிர வெறும் throw அல்ல என்று முடிவு சொன்னார். அதன் பிறகு தான் என்னைப் பந்து வீச அனுமதித்தனர். மீண்டும் வீசிக் கொண்டிருக்கிறேன்!

**கல்கி** : மற்ற ஆஃப் ஸ்பின்னர்களைப் போல் அல்லாமல் நீங்கள் பந்து வீசும்போது நிறைய steps எடுத்துக் கொள்வது ஏன்?

**முரளிதரன்** : எனது பௌலிங் முறை side arm action. அதனால் கிட்டத்தட்ட நான் 15 steps எடுத்துக் கொண்டுதான் வீசுகிறேன். இதன் காரணமாகவே நான் பந்தை எப்படி வீச வேண்டும் என்று நினைக்கிறேனோ அப்படியே வீச முடிகிறது. அதாவது ஆட வரும் ஆட்டக்காரர்களுக்கு ஏற்ப பந்தை உயரமாகப் போடுவது, ஆஃப் ஸ்பின் செய்வது, பந்தை நேராகப் போடுவது, வேகமாகப் போடுவது என்று என்னால் பலவித ஜாலங்களைச் செய்ய முடிகிறது. ஆட்டக்காரர்களும் எனது பந்தை எதிர் கொள்ளத் திணறுகிறார்கள்!

**கல்கி** : குரு என்று நீங்கள் யாரை நினைக்கிறீர்கள்?

**முரளிதரன்** : ஆஸ்திரேலியாவின் ஷேன் வார்னே, பாகிஸ்தானின் சாக்லின், மேற்கிந்திய அணியின் ஹூப்பர் ஆகியோர் என்னைக் கவர்ந்த பந்து வீச்சாளர்கள். ஆனாலும் கூட உலகின் சிறந்த ஆட்டக்காரர்களான வெங்கட், பிரசன்னா ஆகியோரின் பந்து வீச்சைப் பார்த்தே நான் ஆஃப் ஸ்பின் போடக் கற்றுக்

கொண்டேன். இப்போது கூட நாங்கள் ஆடும் போது வெங்கட் அம்பயராக வரும் பட்சத்தில் ஆட்டம் முடிந்த பிறகு அவரிடம் எனது சந் தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வ துண்டு. எனது பந்து வீச்சில் மெருகேறுகிறது என்றால், அதற்கு முழுக் காரணமும் வெங்கட் தான். ஆனாலும் எங்கள் அணியின் தலை வரைத்தான் நான் கடவுளாக நினைக்கிறேன்.

**கல்கி :** நீங்கள் ஃபீல்டிங்கிலும் சிறப்பாகச் செயல்படுகிறீர்களே, அது எப்படி?

**முரளிதரன் :** இப்போதெல்லாம் ஒருவர் ஒரு துறையில் மட்டுமே சிறந்து விளங்கினால் போதாது. காலம் அப்படியிருக்கிறது! நல்ல பௌலராக இருந்தாலும் சரி, நல்ல பேட்ஸ்மேனாக இருந்தாலும் சரி அவர்கள் நல்ல ஃபீல்டராகவும் இருக் கத்தான் வேண்டும். ஒருவர் எதிர் அணியின் எத்தனை ரன்களைத் தடுக் கிறாரோ அத்தனை ரன்கள் அவர் எடுப்பதற்குச் சமம். இதன் காரண மாகத்தான் எங்கள் அணியிலுள்ள எல்லோருமே ஃபீல்டிங்கில் மிகுந்த கவனம் செலுத்துகிறோம். நன்றாக ஃபீல்டிங் செய்யாத அணி நிச்சயம் வெற்றி பெற முடியாது.

**கல்கி :** உங்களுடைய பந்து வீச் சைத் துணிச்சலாக எதிர் கொண்டு ஆடுபவர்கள் யார்?

**முரளிதரன் :** சச்சின், அஸார், கங்குலி, லாரா... இவர்களெல்லாம் என் பந்து வீச்சைத் தைரியமாக எதிர் கொள்பவர்கள் என்பதால் அவர் களுக்குப் பந்து போடுவதும் எனக்குக் கடினமாகவே இருக்கும்.

**கல்கி :** இலங்கை அணியில் இடம் பெற்றுள்ள ஒரே தமிழர் நீங்கள் தான். எப்படி இடம் பெற்றீர்கள்?

**முரளிதரன் :** ஐந்தாறு தலை முறைகளாகவே இலங்கையிலுள்ள கண்டியில் செட்டில் ஆகி விட்ட தமிழ்க் குடும்பம் எங்களுடையது. தமிழில் எழுதப் படிக்கத் தெரியாது என்றாலும் வீட்டில் நாங்கள் பேசிக் கொள்வதெல்லாம் தமிழில்தான். இதெல்லாம் இலங்கை அணியில் நான் இடம் பெறுவதற்கு ஒருபோதும் தடையாக இருந்ததில்லை. காரணம், எங்கள் தலைவர் திறமைக்கு மட்டுமே முதலிடம் கொடுப்பவர். அணியிலுள்ள எல் லோரும் என்னிடம் வித்தியாசம் பாராட் டாமல் சகஜமாகத்தான் பழகுகிறார்கள். தவிர, தமிழ் வார்த்தைகளில் ஏதேனும் ஜெய சூர்யாவுக்குச் சந்தேகம் வந்து விட்டால், என்னையொரு தமிழ்ப் பண்டிதனாகவே நினைத்து என்னிடம்தான் வந்து விளக்கம் கேட்பார். இதற்காகவே நான் தமிழில் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு, நிறையத் தமிழ் நூல்களைப் படிக்க வேண்டும் என்று நினைப்பேன். ஆனால் ஏது நேரம்?

பேட்டி, படம் : **நந்தினி**



## — இலங்கை வீரர் முத்தையா முரளிதரன்

26

# புத்தாண்டு

# COST TO COST SUPER SALE

## டிசம்பர் 25 – ஜனவரி 1

**மேலும் ரூ.20 லட்சம் மதிப்புள்ள 5000 பரிசுகளை வென்றிடுவீர்!**

1வது பரிசு — மாருதி எஸ்டீம்

2வது பரிசு — மாருதி 800

3வது பரிசு — தங்க நகைகள்

4வது பரிசு — வைர நெக்லஸ்

5வது பரிசு — பஜாஜ் ஸ்கூட்டர்

6வது பரிசு — டிவிஎஸ்-50

7வது பரிசு — வசந்த் சீலிங் ஃபேன்

8வது பரிசு — பட்டு புடவை

9வது பரிசு — தங்க நாணயம்

10வது பரிசு — வெள்ளி விளக்கு

மேலும் 4214 கவர்ச்சிகரமான பரிசுகள்

PHILIPS | ONIDA | VIDEOCON Washing Machines / Refrigerators | MIX-FAST | VENUS | USHA

BPL | THOMSON | SAMSUNG | IFB | VIDEOCON Televisions | SONY

Insight-546/97

Vasanth® **வசந்த் & கோ**

SHOPPING TO YOUR SATISFACTION

CITIBANK CARDS — NO SERVICE CHARGES

சென்னை: • தி.நகர் : 45 தெற்கு உஸ்மான் சாலை & 8A தெற்கு உஸ்மான் சாலை • மைலாப்பூர் : முதல் மாடி, லஸ் கார்னர், லஸ் • புரசைவாக்கம் : 191 புரசைவாக்கம் நெடுஞ்சாலை • கோடம்பாக்கம்: 20, ஆற்காடு ரோடு, மேம்பாலம் அருகில் • அடையார் : 4 பத்மநாப நகர், சிக்னல் அருகில் • பாடி : 63, M.T.H. சாலை • வண்ணாரப்பேட்டை : 339 திருவொற்றியூர் நெடுஞ்சாலை • ராயபுரம் : 67 மன்னார்சாமி கோயில் தெரு • தாம்பரம் : 21–22 சண்முகம் சாலை • செங்கல்பட்டு : 5, G.S.T. ரோடு, இந்தியன் வங்கி அருகில் • வேலூர் : 15–16, காட்பாடி ரோடு • சத்துவாச்சாரி : 1J, ஆற்காடு ரோடு • சேலம் : 34, முதல் அக்ரஹாரம் • ஓசூர் : 86 B தாலுகா ஆபீஸ் ரோடு • ஈரோடு : 640, பெருந்துறை ரோடு • கோயம்புத்தூர் : 15, ஒப்பணக்கார வீதி • கோயம்புத்தூர் : 1098, கிராஸ் கட் ரோடு, காந்திபுரம் • திருநெல்வேலி : 14, பராசக்தி பில்டிங் • பாளையங்கோட்டை : 11, திருவனந்தபுரம் ரோடு, கோபுரம் எதிரில் • திருச்சி : 2-B/1 கோட்டை, ஸ்டேஷன் ரோடு • தஞ்சாவூர் : 11 முதல் தெரு, மானம்புச்சாவடி • மதுரை : 162, தெற்கு மாசி வீதி & 54 தெற்கு மாசி வீதி • பாண்டிச்சேரி : 414, மகாத்மா காந்தி ரோடு • பெங்களூர் : 101/1 K.H ரோடு.

• பெத்லஹேம் சர்ச்சுக்குள்ளே யேசு பிறந்த இடம்...



**உலகமே டிசம்பர் இருபத்தைந்தாம் தேதி யேசு கிறிஸ்துவின் பிறந்த நாளை கோலாகலமாகக் கொண்டாடுகிறபோது, அவர் அவதரித்த பெத்லஹேம் எப்படி இருக்கும்? தமது பெத்லஹேம் அனுபவத்தை விவரிக்கிறார் ஃபாதர் வின்சன்ட் சின்னதுரை...**

# யேசு கிறிஸ்து பிறந்த ஊரில்...

பெத்லஹேம் இஸ்ரேல் நாட்டில் இருக்கிற சிறிய ஊர். தலைநகரான ஜெருசலம் நகரிலிருந்து காரில் நாலுமணி நேரப் பயணம். கிராமாந்திரமான சூழ்நிலை. கிறிஸ்தவர்களுக்கு மிக முக்கியமான ஸ்தலம் என்பதைத் தவிர, வேறு எந்த விதமான முக்கியத்துவமும் பெத்லஹேமுக்கு இல்லை. பெத்லஹேமில், யேசு அவதரித்த இடத்தில் இப்போது ஒரு சர்ச் இருக்கிறது. பத்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட சர்ச் அது. இன்றும் அதன் பழைமையான கட்டடக்கலையும், பாரம்பரியமும் அங்கே பரிமளிக்கிறது.

சர்ச்சின் உள்ளேயே புறத்தில் மாட்டுத் தொழுவம் போன்றே அமைப்புக் கொண்ட ஒரு பகுதி உள்ளது. இந்த இடத்தில்தான் யேசு அவதரித்த மாட்டுத் தொழுவம் இருந்ததாகக் கூறுகிறார்கள்.

அப்பகுதி, சர்ச்சின் தரைமட்டத்தைவிட, சற்றே தாழ்ந்து இருக்கிறது. மிக எளிமையான முறையில் ஒளியூட்டப்பட்டுள்ளது. யேசு பெருமானின் திருவுருவம் அங்கே இடம் பெற்றுள்ளது. அமைதியான அந்தச் சூழ்நிலையில் கண்களை மூடிக் கொண்டு சில நிமிடங்கள் நிற்கிறபோது, மனதுக்குள் தெய்வீகத்தை உணர முடிகிறது.

உடல் நலக் குறைவு, உடல் ஊனம், குடும்பப் பிரச்னைகள் உள்ளிட்ட பலவற்றாலும் கஷ்டப்படுகிறவர்கள் அங்கே வந்து பிரார்த்தனை செய்கிறார்கள். பலனும் உள்ளது. அவதார ஸ்தலம் தவிர பெத்லஹேம் ஊரின் பிறபகுதிகளிலும் யேசு கிறிஸ்துவின் வாழ்க்கையோடு தொடர்பு கொண்ட பல இடங்கள் இருக்கின்றன.

யேசு மக்களிடையே பிரசாரம் செய்த ஏரிக்கரை, யேசுவின் உடலிலிருந்து ரத்த வியர்வை வெளிப்பட்ட இடம், இறுதியில் முள்முடி அணிந்து, சிலுவையைச் சுமந்தபடி புறப்படும் முன்பு, மண்டியிட்டுத் தலை தாழ்த்தி பிரார்த்தனை செய்த கல், சிலுவை சுமந்து சென்ற பாதை, சிலுவையில் அறையப்பட்ட இடம், அடக்கம் செய்யப்பட்ட இடம் என்று பல இடங்களைக் கண்டு மெய் சிலிர்க்கலாம்.

பெத்லஹேம் புகைப்படக்கார்டுகள், மண், மெடல்கள் என்று அங்கு வரும் மக்கள் ஞாபகார்த்தமாய் வாங்கிச் செல்ல பலவிதமான நினைவுப் பொருட்கள் விற்கப்படுகின்றன. சாதாரணமாக தினமும் பதினைந்தாயிரம் பேர் பெத்லஹேமுக்கு வருகிறார்கள். கிறிஸ்துமஸ் சீசன் துவங்கிவிட்டால் எங்கு பார்த்தாலும் வண்ணத் தோரணங்கள், விளக்கு அலங்காரங்கள் என்று ஊரே களை கட்டி விடும். யாத்திரிகர்களின் எண்ணிக்கையும் தினம் ஒரு லட்சத்தைத் தாண்டி விடும்.

டிசம்பர் இரவில் பெத்லஹேம் சர்ச் விழாக்கோலம் பூண்டு விடும். இரவு பதினோரு மணிக்கு சிறப்பு பிரார்த்தனை தொடங்கும். நள்ளிரவைத் தாண்டி ஒரு மணிவரை வழிபாடு தொடரும்.

கிறிஸ்துமஸ் சமயம் பெத்லஹேமில் இருப்பது வாழ்வின் மிகப் பெரிய பாக்கியம். ●

சந்திப்பு: **மௌலஷ்மி**

# தமிழகச் சீரழிவு!

**கல்கி 14.12.97 இதழில் வெளியான நெய்வேலி சந்தான கோபாலன் பேட்டியில் இடம்பெற்ற ஒரு விஷயத்துக்கு சென்னை வானொலி நிலைய இணை இயக்குநர் எச். ராமகிருஷ்ணன் கடும் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்...**

வித்வான் நெய்வேலி சந்தானகோபாலனின் விசிறி, நான். ஆனால் 'கல்கி'யில் அவரது பேட்டி பார்த்து அதிர்ச்சியுற்றேன், வேதனை அடைந்தேன்! தியாகராஜ சுவாமிகளின் கிருதிகளைத் தமிழில் பாடுகிறாராம்! அவற்றை ஒழுங்காக "சுந்தர"த் தெலுங்கில் பாடினாலே போதாதா?

தமிழில் பாட இவருக்குக் கிருதிகளே

**எச். ராமகிருஷ்ணனுக்கு பதிலடி தருகிறார் நெய்வேலி சந்தான கோபாலன்**

ராமகிருஷ்ணன் அவர்கள் கூறியுள்ளபடி, தமிழில் நிறைய கீர்த்தனைகள், பாடல்கள் இருக்கின்றன. அவற்றைப் பாடாமல், தியாகராஜரின் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினால் அது நிச்சயம் தவறுதான். ஆனால், அவர் குறிப்பிட்டுள்ள தேவாரப் பாடல்கள், கோபாலகிருஷ்ண பாரதி, அருணாசலக் கவி, ஊத்துக்காடு வேங்கடகவி, பாபநாசம் சிவன், மகாகவி பாரதியார் முதலிய எல்லாருடைய தமிழ்ப் பாடல்களையும் நான் பாடிக் கொண்டுதான் வருகிறேன்.

ஆக, தமிழில் பாடல்கள் இல்லாது போய், நான் ஏதோ தியாகராஜரின் பாட்டுக்களை மெனக்கெட்டுத் தமிழ்ப்படுத்திப் பாடுவதாக அவர் நினைத்திருக்கலாம். விஷயம் அது அல்ல.

தியாகராஜரின் தெலுங்குக் கீர்த்தனைகளை, அர்த்தம் தெரியாததால், கேட்டு ரசிக்கப் பலரால் முடிவதில்லை. பாடுகிறவரும் அர்த்தம் தெரிந்து, பாவத்தோடு பாடும்போது, பாடலின் உண்மையான ருசி பாடகனுக்கும், ரசிகனுக்கும் கிடைக்கிறது. மக்களுக்கு அர்த்தம் தெரியாமல், ட்யூனுக்காக மட்டுமே தியாகராஜர் இவற்றைப் பாடியிருப்பார் என்று யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அப்புறம் அந்தப் பாடல்களுக்கும், இன்ஸ்ட்ருமென்ட்டில் அவற்றை வாசிப்பதற்கும் வித்தியாசமே இருக்காது.

தியாகராஜர் கிருதிகளை, ஒரு சிலரின் வேண்டுகோளுக்காக, கவிஞர் பாரதிதாசன் தமிழ்ப்படுத்தியிருக்கிறார். ஆனால் இரண்டோடு நிறுத்திக் கொண்டு விட்டார். அவர் தமது தாய்மொழியில் அழகாகப் புனைந்திருக்கும்போது, இதை எல்லாம் தமிழ்ப்படுத்திக் கொண்டிருப்பது வீண் வேலை என்று அவர் விட்டு விட்டார்.

என் குறிக்கோள் அதுவல்ல. கச்சேரிகளில் முக்கிய கீர்த்தனைகளாகப் பாடப்படும் தியாகராஜரின் பாடல்களை, அர்த்தம் தெரிந்து கொண்டால், எத்தனையோ பேர் அவற்றோடு ஒன்றிப் போய் ரசிக்க முடியுமே என்ற ஆர்வத்தில், இதே கருத்தைக் கொண்டிருந்த ஒரு நண்பரின் வேண்டுகோளுக்கு இணங்கி, இந்தப் பணியில் இறங்கினேன்.



அகப்படவில்லையா? அலைபாயுதே, தாயே யசோதா, ஆரென்ன சொன்னாலும் போன்று எண்ணற்ற பாடல்களை இயற்றித் தந்த ஊத்துக்காடு வேங்கடகவி; 'சபாபதிக்கு', 'தில்லையம்பலத்தானை', 'ஐயே மெத்தக்கடினம்' போன்று நூற்றுக்கணக்கான பாடல்களைத் தந்துள்ள கோபாலகிருஷ்ண பாரதி; 'யாரோ இவர் யாரோ, யாரென்று ராகவனை, காண வேண்டும் லட்சம் கண்கள்' போன்று ராமாயணத்தையே தமிழிசையாய்த் தந்த அருணாசலக்கவிராயர்; 'அருமருந்தொரு' போன்ற சாகாவரம் பெற்ற பல பாடல்களைத் தந்த முத்துத்தாண்டவர்; 'காலைத் தூக்கி நின்று, ஏதுக்கித்தனை மோடி' போன்றவற்றை அள்ளித் தந்த மாரிமுத்தா பிள்ளை; 'நடமாடித் திரிந்த' போன்றவற்றைத் தந்த பாபவினாச முதலியார், 'நாளே நல்ல நாள், தயை புரிய, நினைப்பதெப்போது நெஞ்சே' போன்று பாடப் பாடத் தெவிட்டாத வேதநாயகம் பிள்ளை; 'தெண்டனிட்டேன், பேயாண்டி தனைக்கண்டு' போன்ற அருட்பாடல்களைத் தந்த வள்ளலார்; 'ஏறுமயிலேறி, சரணகமலாலயத்தை, நாதவிந்து' போன்று ஆயிரக்கணக்கான திருப்புகழ்களைத் தந்த அருணகிரிநாதர், மற்றும் திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி, கும்மி, காவடிச்சிந்து, கிளிக் கண்ணி, திவ்யப்பிரபந்தங்கள், திருமுறைகள், அபிராமி பாடல்; ஔவையார், கல்கி, பாபநாசம் சிவன், அம்புஜம் கிருஷ்ணா, மகாகவி பாரதியார், நியாகி சுத்தானந்த பாரதி, யோகி சுரஜானந்தா, கோடீசுவர ஐயர், இன்னும் நூற்றுக்கணக்கானவர்களின் பாடல்களைப் பாடிவிட்டு, தியாகையர், தீக்ஷிதர், புரந்தரதாஸரின் பாடல்களை நெய்வேலியார் தமிழ்ப் "படுத்தட்டும்". நெருக்கமும் உருக்கமும் குழைந்த இனிமை தரும் தமிழ்ப் பாடலே இல்லையென்று இவர் இன்னமும் நினைத்தால், அவரது முயற்சியைத் தொடரட்டும். ஆனால், இசைக் கடலாம் தமிழை அவமானப்படுத்த வேண்டாம்!



# அவமானமல்ல; அணிகலன்!

'குமுதம்' ஆசிரியர் அமரர் எஸ்ஏ.பி. அவர்கள் 'அரசு பதில்கள்' ஒன்றில், தமக்குப் பிடித்த பத்து விஷயங்களில் ஒன்றாக, தியாகராஜரின் பாடல்களை, டிஎஸ். பார்த்தசாரதி தமிழில் தந்துள்ள அர்த்தத்தைப் பார்த்தபடியே, கேட்டு ரசிப்பது என்று குறிப்பிட்டிருக்கிறார்.

தியாகராஜரின் பாடல்களிலுள்ள 'மீட்டர்' மாறாமல், அதே அர்த்தம் தரும் வார்த்தைகளை அமைத்து, அதே பாவம் வெளிப்படப் பாட முடியும் என்று தோன்றிய கீர்த்தனைகளை மட்டுமே இப்போது எடுத்துக் கொண்டு தமிழில் பாடி இருக்கிறேன். எனவே, இது அவமானமல்ல, அணிகலன்! ராமகிருஷ்ணன் போன்ற இசைப் புலமையும், தமிழறிவும் கொண்டவர்கள், இந்த வேள்வியில் பங்குகொண்டு என்னை விடச் சிறப்பாகச் செய்ய முடியும் என்று தோன்றுகிறது.

கேஸட் இன்னும் வெளியாகவில்லை. கேட்ட பிறகு கருத்துச் சொல்லியிருந்தால், அது நியாயமானதா இல்லையா என்று ரசிகர்கள் தீர்ப்புச் சொல்ல முடியும்.

கலியுகத்தில், படு பிஸியான கடவுள் வெங்கடாசலபதிதான். அதனால் திருப்பதியில் அவரைப் பிடிப்பதென்பது மிகவும் அரிதாகிக் கொண்டு வருகிறது - மணிக்கணக்கில் ஒவ்வொரு அறையாகக் காத்துக் கிடந்து, கடலை, பெப்ஸி, ஈநாடு, தினத்தந்தி, கவரிங் செயின், மோதிரம் வாங்கி, டீ.வி. பார்த்து, நடுவே வி.ஐ.பி வந்துவிட்டால் பாயை விரித்துத் தூங்கி, ஒரு மாதிரியாக தரிசனம் கிடைக்கப் பெற்றால்... அவர் பாதத்திலிருந்து பார்வையை நாம் வதனத்திற்கு உயர்த்து முன், 'சரக்கண்டி' என ஒரேயடியாக வெளியே துரத்தப்படும் அவலம்!

இப்படி எல்லாம் நடக்கும் என்பது பெருமாளுக்கு முன் கூட்டியே தெரியாதா என்ன! எனவேதான் தீர்க்க தரிசனத்துடன், தனக்கென ஒரு 'க்ளோனை' கருணை



# மும்பையில் ஒரு சின்னத்

கொண்டு பக்தர்களுக்காக உருவாக்கி வைத்து விட்டார்.

அதற்கு அவர் தேர்வு செய்த இடத்தின் பொருத்தமே அலாதி! சாதாரணர்களுக்கே, மனைவி, அவள் வீட்டார் என்றால் ஒரு 'இது' தான்! மனிதனாய் அவதாரமெடுத்த மாலவனுக்கு 'அதெ'ல்லாம் தெரியாதா என்ன? அதனால்தான், தமது மனைவிக்கு முக்கியத்துவம் கொடுத்து, அந்த மகாலக்ஷ்மியைக் கொண்டாடிக் கோயிலெடுத்து, தம்முடைய காவல் தெய்வமாகப் போற்றும் மும்பைவாசிகள் மீது, அவர் கடைக் கண் பார்வை விழுந்திருக்கிறது! அவள் குடிகொண்டிருக்கும் 'மகாலக்ஷ்மி'யிலிருந்து கூப்பிடு தொலைவிலுள்ள ஃபனஸ்வாடியை கச்சிதமாகத் தேர்வு செய்திருக்கிறார்.

அங்கே ஏழுமலைகள் என்றால், இங்கே ஏழு தீவுகள்! மேலும், மூச்சுவிடக்கூட நேரமில்லாமல் அல்லாடும் மும்பை வாசிகளுக்கு, திருப்பதிக்கும், ஸ்ரீரங்கத்துக்கும், காஞ்சிக்குமாக க்ஷேத்ராடனம் சென்று தமது திவ்விய தரிசனங்களைக் காண நேரம் எங்கே வாய்க்கப் போகிறது என்று, ஃபனஸ்வாடியிலேயே இந்த மூன்று திருக் கோலங்களையும் காட்டி விடுகிறார்.

சப்தகிரியின் ஸ்ரீநிவாசன், ஸ்ரீரங்கத்தின் ரங்கநாதன், காஞ்சியின் வரதராஜன், இம்மூவருமே இங்கு, ருக்மிணி சத்யபாமாவுடன் கூடிய ராஜகோபாலன், சீதை, ஆஞ்சநேயர், லக்ஷ்மண் சகித ராமன், யசோத்காரி போன்றோருடன் எழுந்தருளி, பக்தர்களை அனுக்கிரகிக்கின்றனர். இந்த திவ்விய க்ஷேத்திரத்துக்கு மும்பை வாசிகள் சூட்டியிருக்கும் செல்லப் பெயர் "சின்னத்




திருப்பதி".

இறைவன் தன் எண்ணத்தைச் செயலாக்க ஜகத்குரு பிரதிவாதி பயங்கரம் அனந்தாச்சாரிய சுவாமிகளைக் கருவியாக்கினான். அவர் பாதயாத்திரையின் போது 1910ல் மும்பை மண்ணை மிதிக்க, அடியவர்களின் வேண்டுகோளுக்கிணங்க, பெரும்பாலும் தம் கைப் பொருளையும் பக்தர்களின் காணிக்கையையும் கொண்டு, 1914ல் 2000 சதுர கஜங்களை ஒன்னேகால் லட்சத்திற்கு வாங்கினார். தென்னகத்து சிற்ப வல்லுனர்களை வரவழைத்து, கோயில் வேலைகளைத் துவங்கினார். 4.6.27-ல் ஆலயம் பிரதிஷ்டைக்குத் தயாரானது.

இதற்கென பிரத்யேகமாக, காஞ்சியிலிருந்து சொன்ன வண்ணம் செய்த பெருமாளின் சந்நிதியிலிருந்து ஒரு மூர்த்தியை, திருநாங்கூர் புருஷோத்தமப் பெருமாளின் சந்நிதியிலிருந்து ஸ்ரீ சுதர்சனாழ்வாரையும் பல்லக்கில் கால் நடையாகவே மும்பைக்கு எடுத்து வந்தது குறிப்பிடத் தக்கது. பிரதிஷ்டை அன்று விசேஷ விடுமுறை அளித்து, மராத்திய மாநிலமே இக்கோயிலின் சிறப்புக்குத் தலைவணங்கியது!

நுழைவாயிலில் கோட்டைக் கதவு போன்ற பிரமாண்ட அமைப்பு நுழைந்ததும், வலப்புறத்தில், நம் காலணிகளை பத்திரப்படுத்த 'ஸேஃப் டெபாஸிட் லாக்கர்கள்!' திருமாலின் பாதுகைகளுக்கு பட்டாபிஷேகமே நடந்திருப்பதால், அவன் பக்தர்களின் செருப்புகளுக்கு இப்படி ஒரு சிறப்போ! அருகிலேயே பாதங்களைத் தூய்மைப்படுத்த வசதியான குழாய் நீர்.

பதினாறு கால் மண்டபத்தை அடுத்து, பிரதான நுழைவாயில். கிழக்குப் பார்த்த அழகிய கோபுரம், தங்க முலாமிட்ட துவஜஸ் தம்பம், பலி பீடம், கர்ப்பகிருஹத்தில் நடு நாயகமாக எழுந்தருளியுள்ள திருவேங்கடத்தானின் எதிர்த் திசையில் பெரிய கண்ணாடி... எல்லாமே திருப்பதியின் மறுபதிப்புதான்.

வெளிப்பிராகார அபிஷேக மண்டபத்தில், கண்ணாடி அறை மிகப் பிரசித்தம். நாலாபுறமும் கண்ணாடிகள், நடுவில் அலங்காரக் கட்டில், சுற்றிலும் சிறு சிறு தொட்டில்கள் எனக் கொள்ளை அழகு.

பத்மாவதித் தாயாரின் சந்நிதியில் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியும் எழுந்தருளியிருக்க, இங்கே குங்குமத்துடன், தாயாருக்கு அபிஷேகம் செய்த மஞ்சளும் பிரசாதமாக வழங்கப்படுவது விசேஷம்.

பிரதட்சணத்தில் வாகன அறை, உற்சவ மண்டபம், சந்தன அறை, பால் அறை, வெள்ளிக்கிழமை மண்டபம் போன்றவை அசர வைக்கின்றன. வெளிப் பிராகாரங்களில், சலவைக் கல்லில் கீதோபதேசமும், 108 திவ்ய தேச எம்பெருமான்களின் சித்திரங்களும் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றன.

மொட்டை அடிப்பது, காது குத்துவதிலிருந்து, திருக்கல்யாணம் உட்பட எல்லா சேவைகளும், உற்சவங்களும், திருப்பதி



## பல்லி மோசடி!

**பெ**ங்களூர் ஸ்ரீராம் புரம் பகுதியில் புதிய ஓட்டல் திறப்பு விழா. ரகு என்னும் வாலிபன் டிப்-டாப்பாக உள்ளே நுழைந்து டிபன் சாப்பிட்டான். திடீரென்று, "சாம்பாரில் பல்லி கிடக்கிறது" என்று கத்தினான். அது மட்டும் அல்ல; இதை கார்ப்பரேஷன் அதிகாரிகளுக்குத் தெரிவித்து விடுவதாகப் பயமுறுத்தி பல்லியை எடுத்துக் காண்பித்தான். புதியதாக திறக்கப்பட்ட ஓட்டல். பெயர் கெட்டு விடக் கூடாதே என்று அதிபருக்குக் கவலை. புகார் செய்யாமல் இருக்க வேண்டும் என்றால் ரூ. 2000/- கொடுக்க வேண்டும் என்றான் ரகு. கொடுத்து அழுதார். அப்புறம் தான் தெரிய வந்தது அவனுக்கு இதே தொழில்! பல்லிகளைக் கொன்று கைப் பையில் வைத்துக் கொண்டு டிபன் சாப்பிட்ட பிறகு தட்டில் போடுவான்.

"சாம்பாரில் பல்லி" என்று கூச்சலிட்டு ஓட்டல் அதிபரிடம் பணம் பறிப்பான். ராஜாஜி நகர், மல்லேஸ்வரம், விஜயநகர் பகுதிகளில் இவ்வாறு பணம் பறித்து மோசடி செய்த அவன் அண்மையில் போலீஸாரிடம் சிக்கினான்!

— வி.எஸ். ராஜகோபால்

ஆதாரம் : தினமணி (பெங்களூர்)

போன்றே இங்கே உண்டு. (ஆனால் குறைந்த கட்டணத்தில்.)

வருடாந்தர உற்சவங்களில் பிரம்மோற்சவமும், ரதோற்சவமும் சிறப்புமிக்கவை. அந்தச் சமயங்களில் ஹோமங்கள், வேதபாராயணங்கள், தினமும் இருவேளை சுவாமி புறப்பாடு, விசேஷ அலங்காரங்கள், வாகனங்கள் எல்லாம் உண்டு. கடைசி நாளன்று "அன்னக் கூடா". ஓராயிரம் லட்டு, வடை, சித்ரான்னங்கள் இறைவனுக்கு முன் சமர்ப்பிக்கப்பட்டு, பக்தர்கள் பார்வையில் வைக்கப்படும். அன்று ஜனத்திரள் கட்டுக்கடங்காதாம்! வட இந்தியாவில் வேறு எங்கும் இத்தகைய உற்சவம் கிடையாதாம்! நவராத்திரி விழா, திவ்ய பிரபந்த உற்சவம், 'ஈடு' உற்சவம், இவற்றுக்கு ஈடு இணை இல்லை என்கிறார்கள்!

**நா**ம் சென்றிருந்த அன்று எட்டு கல்யாணோத்சவங்கள்! பிரசாதமாக வழங்கப்பட்ட லட்டு, வடை எல்லாம் (அந்தக்கால) திருப்பதியின் ஒரிஜினல் சைஸ் + டேஸ்ட்! மடப்பள்ளியில் மைசூர்ப்பாகு, புளியோதரை, தத்தியோனம், நெய் வழியும் சர்க்கரை, வெண் பொங்கல்கள், என்சாதம், எல்லாமே பிரசித்தம். தினமும் காலையிலும் மாலையிலும் பக்தர்களை வரிசையாக அமர வைத்து, மந்தார இலையில் பிரசாதம் வழங்கும் அழகே அலாதி!

திருப்பதிக்கு வேண்டிக் கொண்டு, இங்கே பிரார்த்தனை செலுத்துபவர்கள் இன்று ஏராளம். 'அப்படிச் செய்யலாமா?' என்றதற்கு, "நான் யார் செய்யலாம், செய்யக் கூடாது என முடிவெடுப்பதற்கு? இது பக்தர்களின் மனதையும், அவர்கள் நம்பிக்கையும் பொறுத்த விஷயம்!" என்று சொல்கிறார் கோயிலின் நிர்வாகியான கிருஷ்ணமாச்சாரியார்.

"இங்கு வருகை தராத வி.ஐ.பிக்கள் - ஆன்மீகமாகட்டும், அரசியலாகட்டும் - இல்லை. ஒரு காலத்தில் மாதம் 2000 ரூபாய் வருமானம், 10,000 ரூபாய் செலவு என்றிருந்த நிலையிலிருந்து, இன்று செலவுகள் போக, வருடம் நாற்பது லட்சம் வருமானம் என்ற திருப்(ப)திகரமான நிலைக்கு உயர்ந்திருக்கிறோம். மாதாந்தர உண்டியல் கலெக்ஷன் 40,000 தேறும். தவிர மாங்கல்யம், புடைவை, வேட்டி போன்ற காணிக்கைகள். பக்தர்கள் இணைந்து ஒரு 'ரத'த்தையே அன்புக்காணிக்கையாக்கியுள்ளனர். அவ்வப்போது உற்சவரை தங்களிடத்திற்கு அழைத்து பகவத் சேவை செய்கின்றனர். எங்களுக்கிருக்கும் ஒரே பிரச்னை 'இடம்'தான்! அர்ச்சகர்கள், யாத்ரீகர்கள், மடாதிபதிகளுக்கென்று ஒன்றன் மீது ஒன்றாய் மூன்று மாடிகள் கட்டிவிட்டோம். இனி உயரவோ, விஸ்தரிக்கவோ இடமில்லை. இட நெருக்கடியால் இங்கே அங்கப் பிரதட்சணம் செய்ய முடிவதில்லை. மற்றபடி காலை சுப்ரபாதத்திலிருந்து, இரவு ஆரத்தி வரை எல்லாமே திருப்பதி ஸ்டைலில்தான்!" என்கிறார் கிருஷ்ணமாச்சாரி.

ஏழைகளுக்கு இலவச மருத்துவம், வைணவ தர்மத்தை உயர்த்த அனந்தாச்சார்யா இண்டலாஜிகல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், காசி பிரயாகையில் 25 ஸம்ஸ்க்ருத பாடசாலைகள், மற்றும் வெள்ள, புயல் நிவாரண நிதிகள் என்று இந்த சின்னத் திருப்பதியும் பல தர்ம காரியங்களில் ஈடுபட்டிருக்கிறது.

"உள்ளன்புடன் வேண்டிக் கொண்டால் உலகளந்தவன் துயர் துடைப்பான்; இங்கேயும் பல உண்மைச் சம்பவங்கள், அதிசயங்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனால் அவற்றைப் பிரபலப்படுத்தி, இந்தக் கோயிலையும் கமர்ஷியலைஸ் செய்ய விருப்பமில்லை!" என்று முடித்தார் கிருஷ்ணமாச்சாரியார். ●

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# மாம்பலத்தில் ஒரு பாட்ஷா!

"ஜனங்க போக வர எவ்வளவு இடைஞ்சலா இருக்கு பாருங்க. கொஞ்சம் உங்க ஆட்டோவை அப்படித் தள்ளி நிறுத்தக் கூடாதா?"

"முடியாதுய்யா. என்ன பண்ணுவே? என்ன வேணும்னாலும் பண்ணிக்கோ. யார் கிட்டே வேணும்னாலும் சொல்லிக்கோ. போ, போ..."

— இது எழுத்தாளர் நிவேதாவுக்கும் ஆட்டோ டிரைவர் ஒருவருக்கும் இடையில் நடந்த விஷயம். இடம் : மாம்பலம் ரயில் நிலையத்துக்கு வெளியே - ரங்கநாதன் தெரு துவக்கத்தில்,

ஒரு நியாயத்தை எடுத்துச் சொன்னதற்கு இப்படியொரு பதிலா? நிவேதாவால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. உடனே மாம்பலம் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார். சப்-இன்ஸ்பெக்டர் சி.எஸ். ராஜன் ராயிடம் நடந்த விஷயத்தைச் சொன்னார்.

உடனே அவர், "சரி, வாங்க. யார் அந்த டிரைவர்னு காட்டுங்க!" என்று இவருடனேயே புறப்பட்டு வந்தார்.

வந்தபோது, அந்த இடத்தில் இருந்த அத்தனை ஆட்டோ டிரைவர்களும் மரியாதை காட்டினார்கள். 'ஒரு போலீஸ் அதிகாரிக்கு இதெல்லாம் மாமூலான விஷயம் தானே!' என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டார் நிவேதா.

முன்பு வாக்குவாதம் செய்த டிரைவர் முத்து இப்போது அங்கு இல்லை. சவாரி போயிருப்பதாகச் சொன்னார்கள்.

"சரி, முத்து வந்தவுடனே நடந்ததற்கு சார் கிட்டே மன்னிப்புக் கேட்கச் சொல்லுங்க!" என்று பிற டிரைவர்களிடம் சொன்ன எஸ்.ஐ. இவரிடம் திரும்பி, "சாரி சார். எங்க ஏரியாவுலே இப்படி நடந்ததற்கு வருத்தம் தெரிவிச்சுக்கறேன். இனிமே இப்படி நடக்காது!" என்று கைகுலுக்கிவிட்டுச் சென்று விட்டார்.



• நிவேதா - முத்து : இப்போது ராசியாகி விட்டார்கள்!

மறுநாள் நிவேதா அந்தப் பக்கம் வந்தபோது, அந்த டிரைவர் முத்து, ஓடி வந்து, "மன்னிச்சிடுங்க சார். நேத்திக்கு ஏதோவொரு டென்ஷன்ல இருந்ததாலே அப்படி எடக்காப் பேசிட்டேன். சாரி சார்!" என்றபோது இவருக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது.

விசாரித்தபோது, "எஸ்.ஐ. ராஜன் ராய்க்கு நாங்க பயப்படறதில்லை சார். அவரு மேல எங்களுக்கு அப்படியொரு மரியாதை!" என்றார்களாம். இந்த மரியாதையின் காரணமாகவே அவரை இவர்கள் 'பாட்ஷா' என்று அடைமொழியிட்டுச் சொல்கிறார்கள்!

காவல் நிலையத்துக்குச் சென்று நாம் ராஜன் ராயைச் சந்தித்துக் கேட்டபோது, "இது என்னோட கடமை சார். இது பத்திப் பேசறதுக்கு என்ன இருக்கு? ஆட்டோ டிரைவர்கள் மட்டுமில்லை; இந்தப் பகுதியிலிருக்கிற எல்லோருமே நல்லவங்கதான்! சந்தர்ப்ப சூழ்நிலை காரணமா கொஞ்சம் முறை தவறி நடக்கும்போது, அதைப் பக்குவமா எடுத்துச் சொல்றேன். புரிஞ்சுக்கறாங்க. மறுபடியும் தப்பு நடக்காம பார்த்துக்கிறாங்க. அவ்வளவுதான்!" என்றார் அடக்கமாக.

"போலீஸ் துறைன்னாலே அடி, உதைன்னு நினைக்கிற இந்தக் காலத்தில் நீங்க இப்படி இருக்கறது ரொம்ப ரொம்பப் பாராட்டுக்குரிய விஷயம். அதனால உங்களை ஒரு போட்டோ...."

"சாரி சார். நான் என்னோட கடமையைத்தானே செய்யறேன். இதுக்கெல்லாமா பப்ளிசிடி? வேண்டாங்க...!" என்று கூச்சத்தோடு மறுத்து விட்டார் ராஜன் ராய். ●

படம், செய்தி : பிரபுசங்கர்






1997 டிசம்பர் 28
ஈசுவர மார்கழி 13
மலர் : 56
இதழ் : 22

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## 229 – பக்க ஜெயலலிதா விளாசல்!

ஜெயலலிதாவுக்குச் சுயமரியாதை என்பதாக ஒன்று இருந்தால், அரசியலை விட்டே அவர் விலக வேண்டும். அந்த அளவுக்குக் கடுமையாக அவரை உயர்நீதி மன்றம் விமர்சித்திருக்கிறது.

'ஸ்பிக் பங்குகள் விற்பனையை சி.பி.ஐ. ஆராய வேண்டும்' என நீதிபதி வெங்கடாசலம் பிறப்பித்துள்ள உத்தரவு, 229 பக்க ஜெயலலிதா விளாசல்!

'ஓரிரு தொழிலதிபர்களின் ஆதாயத்துக்காக, திட்டமிட்டு அரசுக்கு நஷ்டம் ஏற்படுத்தியுள்ளார் ஜெயலலிதா' என்று மிகத் தீர்மானமாகச் சொல்லியிருக்கிறார் நீதிபதி. பங்குகளை வாங்கிய ஸ்பிக் அதிபர்களும் கண்டனத்துக்குள்ளாகியிருக்கிறார்கள்.

ஜெயலலிதாவின் செயல் மக்கள் விரோதமானது; அரசியல் அதிகார துஷ்பிரயோகம் என்பதுடன் அப்பட்டமான சட்ட மீறலுமாகும் என்றும் சொல்லியிருக்கிறார் நீதிபதி. இந்தக் காரியமானது நீதித் துறையையே அதிர்ச்சியுறச் செய்திருக்கிறது என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

இவ்வளவு கடுமையான வாசகங்களடங்கிய நீதிமன்றக் கண்டனம் இதுநாள் வரை எந்தவொரு முதல்வர் அல்லது அரசியல் தலைவர் பேரிலும் வழங்கப்படவில்லை.

அது மட்டுமல்ல, ஜெ. அரசுக்கும் ஸ்பிக் நிறுவனத்துக்குமிடையே நடந்த பங்கு விற்பனையை யொட்டிய அரசு ஆணையையே நீதிமன்றம் ரத்து செய்துவிட்டது! அரசாங்கம், ஸ்பிக்கிடம் பணத்தைத் திருப்பிக் கொடுத்து, விற்ற பங்குகளை மீட்க வேண்டும் என்றும் உத்தரவிட்டுள்ளது.

அன்றைய தலைமைச் செயலர் எச்சரிக்கையையும் மீறி ஜெயலலிதா செயல்பட்டதால் அரசுக்கு




28.29 கோடி ரூபாய் நஷ்டம்! இந்த நஷ்டத்தை ஜெயலலிதாவும் அவரால் ஆதாயம் பெற்ற எம்.ஏ. சிதம்பரம், ஏ.சி. முத்தையா ஆகியோருமாக ஆறு மாத காலத்துக்குள் ஈடுசெய்ய வேண்டும் என்பதும் நீதிமன்ற உத்தரவு! பிற்பாடு வந்த பெஞ்சு தீர்ப்பு இதற்கு இடைக்காலத் தடைவிதித்து விட்டாலும் சி.பி.ஐ. விசாரணை நடக்க வேண்டும் என்றே கூறுகிறது.

அது மட்டுமல்ல, 28.29 கோடி நஷ்டம் என்பது தோராயமான கணக்குத்தான். சி.பி.ஐ. விசாரணை முடிந்த பிறகுதான் நஷ்டத்தைத் துல்லியமாகக் கணக்கிட முடியும் என்று கூறி, சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவிட்டு விட்டது நீதிமன்றம்!

இதில் வேடிக்கை என்னவென்றால், லஞ்ச - ஊழல் தடுப்புப் பிரிவின் கீழிருந்த இவ்வழக்கை சி.பி.ஐ. விசாரிக்க வேண்டும் என்று கோரி பொதுநல வழக்குத் தொடுத்தவர், இன்று ஜெயலலிதாவுடன் இணைந்துள்ள சு. சுவாமிதான்!

இவ்வளவு நடந்த பிறகும் சுவாமி அந்தக் கூட்டணியில் நீடித்தால், அது அவரது அறியாமையைத்தான் பறைசாற்றும்!

ஆனால், பண்பட்ட நடத்தையை நாம் அரசியல்வாதிகளிடம் எதிர்பார்க்க முடியாது. சு. சுவாமி ஏதேனும் பிதற்றல் சமாதானத்தை வாசாலகமாகப் பிரயோகிப்பார். ஜெயலலிதாவோ உச்சநீதிமன்றம் வரை முறையீடு செய்து, வழக்கை இழுத்தடிப்பார்.

இவர்களுக்குப் பாடம் கற்பிக்கும் அதிகாரம் மக்கள் கையில்தானிருக்கிறது. வருகிற தேர்தலின் போது, நீதிமன்றத் தீர்ப்பைக் காட்டிலும் கடுமையான மக்கள் தீர்ப்பு ஜெயலலிதாவுக்குப் பாடம் புகட்ட வேண்டும்.

## ஈகோ கமிஷன்!

ஒற்றையாளாகத் தலைமைத் தேர்தல் கமிஷனர் இருந்தால், அதிகாரக் குவிப்புக்கு இடமளிக்கிறது என்பதால்தான் மூன்று பேர் அடங்கிய குழுவாக தேர்தல் கமிஷன் மாற்றப்பட்டது. அந்தக் குழுவினரி




டையே கருத்து வேறுபாடு எழுந்தால் பெரும்பான்மை அடிப்படையில் முடிவுகள் எடுக்கப்பட வசதி செய்யப்பட்டது. ஆனால், அக் குழுவினரோ, தங்கள் மனஸ்தாபங்களை மேடை கட்டிப் பறைசாற்றி யிருக்கிறார்கள்!

மனவேறுபாட்டுக்கான காரணத்தை ஆராய்ந்தால், நியாயம் கிருஷ்ணமூர்த்தியின் பக்கமே இருக்கிறது.

சிவசேனை தனது உட்கட்சித் தேர்தலை நடத்த கெடு வைத்து, அதைப் பத்திரிகைச் செய்தியாக வும் ஆக்கினார் கிருஷ்ணமூர்த்தி. அவர் பத்திரிகைகளிடம் பேசியதை ஆட்சேபித்தார் கில். 'இப்படி யெல்லாம் நடக்காமலிருக்க, தேர்தல் கமிஷன் உறுப்பினர்களுக்கு நன்னடத்தை விதிகளைத் தனியே உருவாக்குவது கூட நல்லது' என்று அவரும் தம் பங்குக்குப் பத்திரிகைக்காரர்களிடம் கூறிவிட்டார்!

'சிவசேனையிடம் எதற்கு அனுதாபம் காட்டப்பட வேண்டும்?' என்று கேள்வி எழுப்பி கிருஷ்ண மூர்த்தி விடுப்பில் செல்ல அனுமதி கேட்க, ஜனாதிபதி தலையிட்டு மத்யஸ்தம் செய்யவேண்டிய நிலைமை! கிருஷ்ணமூர்த்தி பணிக்குத் திரும்பி விட்டார் என்றாலும் நடந்த நிகழ்ச்சிகள் ரசக்குறை வானவை.

இந்த நெருப்பில் படுசுகமாய் குளிர் காய்ந்தார் தாக்கரே! 'கிருஷ்ணமூர்த்தி ஒரு காங்கிரஸ் ஆதரவாளர்' என்று குற்றம்சாட்டியதுடன் 'எங்கள் கட்சியின் சட்டதிட்டங்களைக் கேள்வி கேட்க தேர்தல் கமிஷனுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?' என்று துள்ளினார்.

சிவசேனையின் சட்ட-திட்டங்கள், கட்சித் தேர்தல்களைக் கட்டாயமாக்கவில்லையெனில் அது ஒரு தனியார் அமைப்பாகத்தான் தொடர முடியுமேயொழிய அரசியல் கட்சியாகி தேர்தலில் போட்டி யிடக் கூடாது! தேர்தல் கமிஷன், அனைத்துக் கட்சிகளையும் சமநோக்குடன்தான் அணுக வேண்டும்.

உட்கட்சித் தேர்தல்கள் நடத்தாத ஒரு கட்சிக்கு ஜனநாயகத்தில் இடமில்லை. இதை தாக்கரே போன்ற தலைக்கனக்காரர்களுக்கு உணர்த்தி சர்வாதிகாரப் போக்குகளைக் கட்டுப்படுத்த வேண்டு மானால் தேர்தல் கமிஷன் ஒற்றுமையாகச் செயல்பட வேண்டும்; அல்லது தங்களுக்குள் 'மெஜாரிடி' முடிவுக்குத் தேர்தல் கமிஷனர்கள் கட்டுப்பட வேண்டும். ஈகோ பிரச்னைகள் உதவாது!

• பாலு ஐயப்பன் செந்திலுக்குப் பரிசளிக்க அதை அவர் செல்வி பிரேமாவுக்கு அளிக்கிறார்...

**க**டந்த 16.12.97 செவ்வாய்க்கிழமையன்று ஏவி.எம். இராஜேஸ்வரி திருமண மண்டபமே நிரம்பி வழிந்தது, கல்கி வாசகர்களால்! காரணம் கல்கி – பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து நடத்திய கோலாகலமான விழாதான்!

கல்கி நடத்திய ஜோக் போட்டியில் வெற்றி பெற்ற வாசகர் செந்தில்குமாருக்கு, தமது தந்தையார் பாலசுப்பிரமணியம் நினைவாக 50,000 ரூபாய் மதிப்புள்ள தங்க நகைகளை, பாலு ஜுவல்லர்ஸ் அதிபர் பாலு ஐயப்பன் பரிசாக வழங்க, அதை அவர், விரைவில் திருமணமாகப் போகும் செல்வி பிரேமாவுக்குப் பரிசளிக்க... தாம் பெற்ற பரிசையே இன்னொருவருக்குப் பரிசாக அளித்த முதல் விழா இதுவாகத்தான் இருக்க வேண்டும்!

கல்கி வாசகர்கள் சார்பில் ஆசிரியர் அனைவருக்கும் நன்றி கூற, பட்டிமன்றத்துக்கே ஒரு புதிய பரிமாணத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் சாலமன் பாப்பையா தலைமையில் பட்டிமன்றம் ஆரம்பமானது. தலைப்பு : **இன்றைய சூழலில் எது சிறந்தது? காதல் திருமணமா? பெற்றோர் பார்த்து நடத்தும் திருமணமா?**

'காதல் திருமணமே' என்று முதலில் பேச வந்தார் பேராசிரியர் தா. கு. சுப்பிரமணியம் : நாங்கள் காதல் என்று சொல்லுவது சினிமா காதலை அல்ல. அன்புடைய இரண்டு நெஞ்சங்கள் கலக்கிற காதல்! பாலோடு சர்க்கரையும் டிகாக்ஷனும் கலந்தால்தான் அது காப்பி ஆகும். சேர்ந்தால் ஆகாது. அதுபோல நெஞ்சங்கள் இரண்டறக் கலப்பதுதான் காதல். பெற்றோர் பார்த்து நிச்சயிக்கும் திருமணத்தில் நெஞ்சங்கள் சேருகின்றனவே தவிர கலப்பதில்லை. பெற்றோர் நடத்தும் திருமணம் என்பது பணத்தோடு பணம் சேரும் வியாபாரமே தவிர, மனத்தோடு மனம் கலக்கும் காதல் அல்ல. காதல் திருமணங்களால்தான் வரதட்சணையையும் ஜாதி மதங்களையும் ஒழிக்க முடியும். அதனால்தானே 'காதலுக்கு ஜாதியில்லை மதமும் இல்லையே!' என்று பாடினார் கவியரசர் கண்ணதாசன்! காதல் திருமணங்களில்தான் லவ் வெடிக்கும். பெற்றோர் நடத்தும் திருமணங்களில் ஸ்டவ்தான் வெடிக்கும்!

அடுத்ததாக, 'பெற்றோர் பார்த்து நடத்தும் திருமணமே' என்று பேச வந்தார் திருமதி காந்திமதி :

தாங்கள் பேச வந்தது சினிமா காதல் பற்றியல்ல என்று சொன்ன தா.கு. சுப்ரமணியம் சினிமா பாடல்களைத்தான் உதாரணம் காட்டினார். அதே சினிமாவில்தான் 'கண்களே கண்களே காதல் செய்வதை விட்டு விடுங்கள்' என்றும் கவியரசர் கண்ணதாசன் எழுதியிருக்கிறார்.

பெற்றோர் மணமகளையோ மணமகனையோ தேடும்போது வெறும் அழகைப் பார்த்து முடிவெடுப்பதில்லை. படிப்பு, வருமானம், குடும்பப் பின்னணி, உறவு, நட்பு என்று பலவற்றையும் விசாரணை செய்தே முடிவெடுக்கிறார்கள். ஆனால் காதலில் இதெல்லாம் பார்ப்பதில்லை. அதனால்தான் திருமணத்துக்குப் பிறகு சிறு சிறு பிரச்னைகள் கூட அங்கே விஸ்வரூபமெடுக்கிறது. பெற்றோர் நடத்தும் திருமணத்தில் அப்படியில்லை. சிறு சிறு பிரச்னைகளைத் தீர்த்து வைக்க இங்கே பெற்றோர்கள் இருக்கிறார்கள். இங்கே பார்த்தவுடன் லவ் வெடிப்பதில்லை என்பது உண்மைதான். திருமண நிச்சயத்தில் அது அரும்பாகி, திருமணத்தி...



• சாலமன் பாப்பையா

# ஆடம்பரமின்றி ஓர் ஆரவார விழா!

மொட்டாகி, பிறகு மலராக மலருகிறது காதல். இப்படி மலருகிற காதல்தான் மணம் வீசுமே தவிர, வெடிக்கிற காதல் அல்ல.

மூன்றாவதாகக் காதல் கட்சியைப் பலப்படுத்த வந்தவர் ராஜா : பெற்றோர் பார்த்துச் செய்கிற கல்யாணங்களெல்லாம் ஆராய்ச்சி செய்துதான் நடக்கிறதாம்! இங்கே கமிஷன் போட்டு விசாரித்தாலே சிக்கல் வருகிறது. இந்த நிலையில் இவர்களுடைய விசாரணை எப்படி நடக்கும் தெரியுமா? பக்கத்து வீட்டில் போய், ''பொண்ணு எப்படி?'' என்று கேட்பார்கள். உடனே அவர்; ''அந்த வீட்டுலயா பொண்ணெடுக்கப் போறீங்க...?'' என்று இழுப்பார். அப்படியொரு மனநிலை இங்கே!

பல பெற்றோர்கள் என்ன நினைக்கிறார்கள் தெரியுமா? பெண்ணை எப்படியாவது தள்ளி விட்டால் போதும் என்றுதான்! இந்த நிலையில் அந்தத் திருமணங்கள் எப்படி சந்தோஷமாக இருக்கும்? பிரச்னைகள் வந்தால் பெரியவர்கள் வந்து அட்வைஸ் செய்வார்களாம்! நல்லபடியாக அட்வைஸ் செய்கிற பெரியவர்கள்தான் இங்கே இருக்கிறார்கள் என்றால் கூட்டுக் குடித்தனங்கள் போய் தனிக்குடித்தனக் கலாசாரம் எப்படி வந்தது? பெற்றோர் பார்த்து நடத்தும் திருமணம் என்பது ஐ.மு. அரசு மாதிரிதான். கேசரியை எதிர் பார்த்த மாதிரி, இங்கே எதெற்கெடுத்தாலும் பெரியவர்களுக்கு அடங்கியே நடக்க வேண்டியிருக்கும். அதில் என்ன சுவை?

நான்காவதாக, 'பெற்றோர் பார்த்து நடத்தும் திருமணமே' என்று அடித்துப் பேச வந்தார் ராஜாராம் : இராமகிருஷ்ணபரமஹம்சர் – சாரதா தேவி மாதிரி, காந்திஜி – கஸ்தூர்பா மாதிரி காதல் திருமணம் செய்து கொண்ட ஜோடிகள் ஒன்றைக் காட்ட முடியுமா? காரணம், காதல் என்பது பருவக் கிளர்ச்சியால் வருவது. தான் அறுந்த செருப்பைப் போட்டுக் கொண்டிருந்தாலும் பரவாயில்லையென்று தனது மகனுக்கு புது ஷூ வாங்கிக் கொடுத்து சந்தோஷப்படும் தந்தைகள் தான் இங்கே இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்கள் மகனுக்கோ அல்லது மகளுக்கோ வாழ்க்கைத் துணையைத் தேடுகிறபோது மட்டும் கடனே என்று செய்வார்களா? ஒருபோதும் செய்ய மாட்டார்கள். அதனால்தான் 'காதலை இலக்கியத்துக்கு விட்டு விடுங்கள்; திருமணத்தை பெற்றோரிடம் விட்டு விடுங்கள்!' என்று கண்ணதாசனே சொல்லியிருக்கிறார்.

இறுதியாக முடிவு சொன்னார் சாலமன் பாப்பையா : காதல் ஜாதி, மதம் பார்த்து வருவதில்லைதான். ஒரு இந்துப் பெண்ணும் கிறிஸ்துவப் பையனும் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறார்கள். காதலைத் தவிர அவர்கள் எதையுமே பார்க்கவில்லை. கார்த்திகை தீபம் வருகிறது. அந்தப் பெண் சென்ற ஆண்டை நினைத்துப் பார்க்கிறாள். விளக்கேற்றி மகிழ்ந்தது நினைவுக்கு வருகிறது. அவன் 'வா கோயிலுக்குப் போயிட்டு வரலாம். இன்னைக்கு தீபமாச்சே. நல்ல நாளாச்சே...!' என்று அழைக்கிறான். கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு, 'எல்லா சாமியும் ஒன்னுதானே... வாங்க நாம சர்ச்சுக்குப் போயிட்டு வரலாம்!' என்று அவள் அவனை அழைக்கிறாள்.

* தா. கு. சுப்ரமணியம்





* ராஜா



* காந்திமதி



* ராஜாராம்

இப்படி மனம் கலந்து விட்டால் அந்தக் காதல் இனிமைதானே! ஆனாலும் ஒரு சிக்கல். இன்றைக்கு இப்படியா நடக்கிறது? ஜாதிகளைத் துச்சமாக நினைத்து வேறு வேறு ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் திருமணம் செய்து கொண்டவர்கள், தங்களுக்குக் குழந்தை பிறந்ததும் என்ன செய்கிறார்கள்? அதற்கு யாருடைய ஜாதியைப் போட்டால் அரசாங்கத்தில் சலுகைகள் கிடைக்கும் என்று பார்த்துப் போடுகிறார்கள். இதில் எங்கே ஜாதி ஒழிந்தது? அடுத்த தலைமுறையினராவது ஜாதி – மதங்களையெல்லாம் கடந்து, ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கினால் நல்லதுதான். வரவேற்கக்கூடியதுதான்.

ஆனால் இன்றைய நிலைமை என்ன? இலக்கியங்கள், சினிமா, நாடகங்கள், கதைகள் என்று எல்லாவற்றிலும் காதல் பேசப்படுவதோடு சரி. சமூகத்தில் பின்பற்றப்படுவதில்லை. பெற்றோர் பார்த்து நடத்தும் ஒன்றிரண்டு திருமணங்களில் பணம் பிரதானமாக இருக்கலாம்தான். ஆனாலும் எல்லாமே அப்படி இருப்பதில்லை. எனவே, இன்றைய சூழலில் பாதுகாப்பானது பெற்றோர் பார்த்து நடத்தும் திருமணமே என்று உறுதியாகச் சொல்லி முடிக்கிறேன். வணக்கம்!

— நமது நிருபர்கள்

படங்கள் : யோகா




# பின்னணி என்ன?

**அ.இ.அ.தி.மு.க. – பா.ஜ.க. கூட்டு என்பது தமிழக அரசியலின் உச்சகட்ட கிளைமாக்ஸ். இந்த கிளைமாக்ஸின் பின்னணி என்ன?**

'தி.மு.க.வும் த.மா.காவும் தனித்தனி அணியாக நிற்கும்போது, மூன்றாவது அணியாகத் தாங்கள் வோட்டைப் பிரித்து வெற்றி கொள்ளலாம்' என்று ஜெ. போட்ட கணக்கு தப்புக் கணக்காகி விட்டது. இந்த நிலையில் பலவீனமான தமிழ்நாடு காங்கிரஸுக்கு ஏகப்பட்ட இடங்களையும் கொடுத்து, அவர்களுக்காக உழைப்பதும் வீண் என்று ஜெ. கருதியிருக்கக்கூடும். மாறாக, தமிழ்நாட்டில் மூன்று, நான்கு தொகுதிகளில் கணிசமான செல்வாக்குக் கொண்ட பா.ஜ.க.வுடன் உடன்பாடு கொண்டால், நாளை மத்தியில் அவர்கள் ஆட்சி ஏற்பட்டால் சுமுக உறவு காரணமாக காரியங்கள் சாதித்துக் கொள்ளலாம் என்று கணக்குப் போட்டிருக்கிறார். குறிப்பாக சி.பி.ஐ. வழக்குகள். தவிர, தோழி குடும்பத்து ஹவாலா வழக்குகளுக்கும் ஒரு முடிவு காண வேண்டுமென்பது அவரது சின்ன ஆசை.

இது தவிர, தி.மு.க. – த.மா.கா. கூட்டணி கொஞ்சம் குறைந்த அளவில் வெற்றி பெற்றால் கூட 'மக்கள் நம்பிக்கையை இழந்து விட்டார்கள்' என்று கூறி கலைஞர் அரசைக் கலைக்க வைப்பதும் அவர் நோக்கம். ஒரு சரியான மக்கள் தலைவர் இல்லாமல், அகில இந்திய அளவில் சப்பாணியாக இருக்கும் காங்கிரஸ், இனி ஒருபோதும் மத்தியில் ஆட்சி பீடம் ஏறப் போவதில்லை என்று ஒரு தீர்மானமான முடிவுக்கு ஜெ. வந்து விட்டதனால் தான் பா.ஜ.க.வுடன் நெருக்கம். சோனியா தீவிரப் பிரசாரம் மேற்கொண்டாலும், மத்தியில் பா.ஜ.க. தனிப்பெரும் கட்சியாக வரும் என்பது அம்மாவின் தீர்க்கமான கணிப்பு. இந்தக் காரணங்கள்தான் புது உறவுக்கு அடிப்படை... என்று சொல்லப்படுகிறது.

"பா.ஜ.க., ஜெ.வுக்கு பிடித்த கட்சி என்பது 1991லிருந்தே எனக்குத் தெரியும் என்கிறவர், முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர் ஒருவர். குறிப்பாக கரசேவையை ஆதரித்தது, கொஞ்சம் டென்ஷனான அந்தக் காலகட்டத்தில் சென்னையில் அத்வானி பேச அனுமதி கொடுத்தது போன்றவற்றைக் குறிப்பிடுகிறார் அவர். ஜெ. ஊழல் வழக்கில் கைதான போது, சில டெக்னிகல் விஷயங்களைச் சுட்டிக் காட்டி, தமிழக பா.ஜ.க.வின் துணைத் தலைவர் மைத்ரேயன் விட்ட அறிக்கைகள் ஜெ.வுடன் பா.ஜ.க. நெருங்குவதற்கான சாத்தியக்கூறுகளை உண்டாக்கின என்றும் சொல்லப்படுகிறது.

"பா.ஜ.க.வுடனான எங்கள் கூட்டு சந்தோஷத்தைக் கொடுக்கிறது. கதர்ச் சட்டையைப் போட்டுக் கொண்டு, களத்தில் இறங்

காமலே எங்களை வேலை வாங்கும் காங்கிரஸாரை விட, பா.ஜ.க.வினர் எவ்வளவோ மேல். ஒவ்வொரு பகுதியிலும் குறைந்த அளவே இருந்தாலும், திட்டமிட்டு வேலை செய்பவர்கள் அவர்கள். அம்மா எது செய்தாலும் அது சரியாகவே இருக்கும்'' என்று நம்மிடம் சொன்னார் சென்னையைச் சேர்ந்த அ.இ.அ.தி.மு.க. தொண்டர் ஹரி. நான்கு மணிக்கு அம்மா தலைமைக் கழகத்துக்கு வரப்போவதை ஒட்டி இரண்டு மணியிலிருந்தே காத்துக் கொண்டிருந்தார் அவர்.

''தமிழ்நாட்டில் மதநல்லிணக்கத்துக்கு ஒன்றும் ஆகாது. பா.ஜ.க. ஆளும் மாநிலங்களில் வகுப்புக் கலவரங்கள் அறவே கிடையாது. தமிழ்நாட்டில் காங்கிரஸ் எங்கிருக்கிறது? 'பேச்சு வார்த்தைக்கு வருகிறோம்' என்று காங்கிரஸார் சொன்னார்கள்! 'வருகிறேன்' என்று சொல்பவர்களை, பண்பாட்டின்படி வரவேற்றுப் பேசி அனுப்பினோம். அவ்வளவுதான். தி.மு.க. – த.மா.கா. அணியை மண்ணைக் கவ்வச் செய்யும் சக்தி எங்கள் கூட்டணிக்கே உண்டு. திராவிட கலாசாரம் என்று கூறி பிரச்னையை திசைதிருப்புகிறார்கள். புரட்சித் தலைவரின் வழியில், புரட்சித் தலைவி, சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அரணாகத் தொடர்ந்து இருப்பார். மற்றபடி, பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால், 'வழக்குகள் வாபஸ் கலைஞர் டிஸ்மிஸ்' என்பதெல்லாம் உங்கள் ஊகம்தான்'' என்று நம்மிடம் கூறினார் அம்மாவுக்கு நெருக்கமான முக்கியப் பிரமுகர் ஒருவர்.

கரசேவையை ஜெ. ஆதரித்த போது 'பா.ஜ.க.வின் ஊதுகுழலாக மாறி விட்டார் ஜெயலலிதா' என்று அறிக்கை விட்டவர்தான் வாழப்பாடி. காலத்தின் கோலம், இன்று பா.ஜ.க., ஜெ.வுடன் ஒரே அணியில் அவர். ''கொள்கை அடிப்படையில் கூட்டணி வைத்துக் கொண்ட காலம் எல்லாம் போய் விட்டது. எப்படி அணிகள் அமைத்தால் அதிக இடங்கள் பெற முடியும் என்பதே நோக்கமாக இருக்கிறது. பா.ஜ.க.வை முஸ்லீம்களின் எதிரி என்று சொல்வதும் சரியல்ல. சமீப காலங்களில் மைனாரிட்டி வகுப்புகளுடன் அனுசரித்துப் போகும் போக்கைக் கையாண்டு வருகிறார்கள் அவர்கள். அதுவும் வாஜ்பாய் போன்ற மிதவாதத் தலைவர் பொறுப்புக்கு வந்தால் மதநல்லிணக்கம் வளரும்'' என்று சொன்னார் வாழப்பாடி அணி பிரமுகர் ஒருவர். அதே போல் கூட்டணியில் இருக்கும் ம.தி.மு.க. கூட, 'வாஜ்பாய் பிரதமர்' என்ற அடிப்படையில்தான் பா.ஜ.க.வை ஆதரிப்பதாக அக்கட்சியினர் கூறுகிறார்கள்.

இந்தக் கூட்டணியில் பா.ஜ.க. வட்டாரத்தில் ஒரே சந்தோஷக் காட்சிகள்தான். இனி தாமரைச் சின்னம் குக்கிராமத்தில் கூட பரவுமே!

இடையில் அமைப்புச் செயலாளர் இல. கணேசன், தி.மு.க.வுடன் உறவை வைத்துக் கொள்ள விரும்பியதாகவும் ஆனால், துணைத் தலைவர் மைத்ரேயன் ஜெ.வுடன்தான் தேர்தல் உறவு வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொன்னதால் கருத்து வேறுபாடுகள் இருந்ததாகவும் செய்திகள் வந்தன. மத்தியில் துணைத் தலைவராக இருக்கும் ஜனா. கிருஷ்ணமூர்த்தி, ஜெ. ஆதரவு நிலையை எடுக்கவே, விறுவிறுப்பாகக் காட்சிகள் அரங்கேறினவாம்.

''நீங்கள் சொல்வது போலெல்லாம் தி.மு.க. – அ.தி.மு.க. ஆதரவுப் போக்கு என்று எங்களுக்குள் பிரிவெல்லாம் கிடையாது. கட்சியின் உள் அரங்கில் பலவித விஷயங்களை விவாதிப்போம். ஆனால் வெளியே வரும் போது ஒரே குரலாக – கருத்தாகத்தான் சொல்லுவோம்'' என்ற மைத்ரேயன், தொடர்ந்து நம்மிடம் பேசினார்.

''இந்தத் தேர்தலைப் பொறுத்தமட்டில் எங்கள் கோஷம் 'Stable Govt., Able Prime Minister, decisive majority. அந்த அடிப்படையில் பா.ஜ.க. வலுவாக இல்லாத மாநிலங்களில் மாநிலக் கட்சிகளுடன் கூட்டணி அமைத்து வருகிறோம். மகாராஷ்டிரம், பஞ்சாப், பீகார், ஹரியானா போன்ற மாநிலங்களில் பிராந்தியக் கட்சிகளுடன் ஏற்கெனவே கூட்டு இருக்

''கங்கை கூவத்துடன் சேர்ந்தால், கங்கைக்கு ஒன்றும் நேராது. ஆனால் கூவம் சுத்தமடைய வாய்ப்பு இருக்கிறதல்லவா!'' என்று தமாஷாகவோ அல்லது சீரியஸாகவோ நம்மிடம் சொன்னார் ஒரு ஸீனியர் பா.ஜ.க. பிரமுகர்.

கிறது. தெற்கே ஆந்திராவில் விஜயசாந்தி பிரசாரம் செய்ய, லட்சுமி பார்வதியுடனும், கர்நாடகத்தில் ஹெக்டேயுடனும் கூட்டு வரலாம். அந்த அடிப்படையில் வியூகத்தை வகுத்து வருகிறோம். அ.தி.மு.க.வுடனான எங்கள் கூட்டு என்பது தெற்கேயிருந்து பா.ஜ.க.வுக்கு அதிக இடங்கள் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் உண்டானது தான். தவிர, நாளை மெஜாரிட்டிக்கு ஏதாவது பற்றாக்குறை என்றாலும் தோழமை உணர்வுடன் போட்டியிட்ட கட்சிகள் கைகொடுக்குமே! வடக்கே காங்கிரஸ் செல்லாக்காசு ஆகிவிட்டது. தெற்கே அதற்கு இருந்த பலத்தையும் ஒழித்துக் கட்டுவதுதான் எங்கள் நோக்கம்'' என்றார்.

"அது சரி; அதற்காக 'சுத்தமான' நீங்கள் ஊழல் கையுடன் உறவு கொள்ள வேண்டுமா என்ன? இதனால் அதிகமாக பாதிக்கப் படுவது உங்கள் இமேஜ்தானே!"

"இந்த பாராளுமன்றத் தேர்தலில், பா.ஜ.க. தனித்து ஆட்சி ஏறுவதற்கான உத்தியின் அடிப்படையில் மாநிலக் கட்சிகளுடன் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டு வருகிறோம். 'காங்கிரஸ் - த.மா.கா. இல்லாத கூட்டணியில் இணைவோம்' என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். அந்த அடிப்படையில் அ.தி.மு.க. கூட்டணியில் பங்குகொண்டிருக்கிறோம்.

''ஊழல் வழக்குகளைப் பொறுத்தவரை நாட்டில் உள்ள உச்சநீதிமன்றம் ஜெயலலிதாவும் மற்றவர்களும் ஊழல் செய்திருக்கிறார்கள் என்று இதுவரை எந்த வழக்கிலும் அறுதியிட்டுத் தீர்ப்புக் கூறவில்லை. அதுவரை அவர்களை எப்படி ஊழல்வாதிகள் என்று சொல்ல முடியும்'' என்று கேட்கிறார் மைத்ரேயன்.

''கங்கை கூவத்துடன் சேர்ந்தால், கங்கைக்கு ஒன்றும் நேராது. ஆனால் கூவம் சுத்தமடைய வாய்ப்பு இருக்கிறதல்லவா!'' என்று தமாஷாகவோ அல்லது சீரியஸாகவோ நம்மிடம் சொன்னார் ஒரு ஸீனியர் பா.ஜ.க. பிரமுகர்.

"அ.தி.மு.கவுடன் நாங்கள் இணைந்ததற்கு வானத்துக்கும் பூமிக்கும் பத்திரிகைகள் குதிக்கின்றன. 'பா.ஜ.க. ஒரு தீண்டத்தகாத கட்சியல்ல' என்று கலைஞர் கூட சொல்லியிருக்கிறாரே! அது தவிர, வாஜ்பாயை 'Right man in the wrong party' என்று மாறன் புகழ்ந்திருக்கிறார். த.மா.கவுடன் தி.மு.க. கூட்டணி ஏற்பட்டிருக்காவிடில் பா.ஜ.க.வும் - தி.மு.க.வும் நெருங்கி வந்திருக்கும்'' என்ற ரகசியத்தை உங்களுக்கு இப்போது சொல்கிறேன். இன்னமும் கூட தேர்தலுக்கு அப்புறம் பா.ஜ.க.வுக்கு மெஜாரிட்டி தட்டுப்பாடு என்றால், தி.மு.க. உதவிக்கு வரக்கூடும்'' என்று அதிரடித் தகவல்களைச் சொன்னார் அந்தப் பிரமுகர்.

மேலும், ''பா.ஜ.க. தனித்து ஆட்சிக்கு வந்தால், கூட்டணிக் கட்சி என்பதற்காக ஜெ. மற்றும் அவரது கூட்டணிகள் மேல் உள்ள வழக்குகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்படும் என்பதெல்லாம் வெறும் ஊகம்தான். ஊழலைப் பொறுத்தமட்டில் சமரசமே கிடையாது. எங்கள் தலைவர் அத்வானி மீது ஹவாலா ஊழல் குற்றச்சாட்டு சொல்லப்பட்ட போது அவர் பதவி விலகினாரே!'' என்றார் அந்தப் பிரமுகர்.

கூட்டணிகள் முடிந்த கதையாகி விட்டதால், இனி வேட்பாளர் தேர்வு, பிரசாரம் தானே! பா.ஜ.க.வுக்கு குறைந்தபட்சம் நான்கு தொகுதிகள் கொடுக்கப்படலாம் என்று சொல்லப்படுகிறது. பா.ஜ.க. பிரசார மேடைகளில் கூடியவரை சர்ச்சைக்குரிய ஆர்.எஸ்.எஸ்., இந்து முன்னணித் தலைவர்களை பேசச் சொல்லக் கூடாது என்றும் அறிவுரை வழங்கப்பட்டிருக்கிறதாம். இது தவிர, 'இந்துத்வா' பேச்சுக்களுக்கு 144 போட வேண்டும் என்றும், 'நிலையான அரசு; வாஜ்பாய் பிரதமர்' என்ற அடிப்படையில் பிரசாரம் செய்ய வேண்டும்'' என்றும் ஆலோசனை வைக்கப்பட்டிருக்கிறதாம்.''

பா.ஜ.க. - அ.தி.மு.க. கூட்டால் மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள் தி.மு.க. - த.மா.கா.வினர். 'அரசின் மீது பொதுவான அதிருப்தி. சட்டம் ஒழுங்குப் பிரச்னை, குண்டு வெடிப்புகள் என்று ஒரு சாதகமற்ற நிலை இருந்து வந்தது. கொஞ்சம் அதிக பட்சமாக ஓடி உழைத்துத்தான் வெற்றிக் கனியை பறிக்க முடியும் என்று இருந்தது. ஆனால் இவர்களது கூட்டுக்குப் பிறகு நிலை மாறி விட்டது. முஸ்லீம், கிறிஸ்துவ சிறுபான்மைப் பிரிவு மக்கள் ஒட்டுமொத்தமாக எங்களுக்குத்தான் வோட்டுப் போடுவார்கள். அது தவிர, எங்கள் தி.மு.க. வோட்டு வங்கியை யாரும் பிரிக்க முடியாது. ஏற்கெனவே காங்கிரஸுக்கு வோட்டுப் போட்டு, இப்போது த.மா.வுக்கு வோட்டுப் போட்டுக் கொண்டிருக்கும் நடுநிலையாளர்களை பா.ஜ.க. - அ.தி.மு.க. கூட்டணி தடுமாறச் செய்யாது. எனவே எல்லாத் தொகுதிகளிலும் எங்கள் வெற்றி நிச்சயம்!'' என்கிறார்கள் அறிவாலயப் பிரமுகர்கள்.

— ப்ரியன்

# அவள்

வையவன்

"விளக்கை அணைச்சுடுவமா?"

வினயா விநோத்தைத் திரும்பிப் பார்த்தாள். அவளது உள்ளங்கையில் ஒரு மின்மினிப் பூச்சி ஊர்ந்து கொண்டிருந்தது.

அது ஊர ஊர அவள் உள்ளங்கை குறுகுறுத்தது. ஒரு லைட்டைப் போட்டுப் போட்டு அணைப்பது போல் மின்மினியின் வால்புறத்தில் ஒளிர்ந்து அணையும் ஓர் ஒளித்துளி.

திரும்பிய வினயாவின் முகவெட்டுத் தோற்றம். ஒரு செல்லக் கோபம். இகழ்ச்சி. 'சீ, நீ இவ்வளவு மட்டமா?'

"ஏன்... வெளக்கை அணைச்சா மின் மினி எஃபெக்ட் நல்லாத் தெரியும்னு சொன்னேன்."

கண்களைத் திருப்பி வினயா மின்மினியைப் பார்வையிட்டாள்.

அவன் துணிந்து விளக்கை அணைத்தான். சுருட்டி வைத்திருந்த பாய் விரிவது போல் இருள் விரிந்தது.

அந்த மின்மினி தவிர அறையில் வேறு வெளிச்சமில்லை.

விநோதின் கன்னம் வினயாவின் கன்னத்தோடு இழைந்தது. இரண்டு கன்னங்கள் ஒட்டிய இருமுகங்களும் மின்மினியையே பார்த்தன.

"வீட்டிலே யாருமில்லேங்கறதே தெரியாது. ஆக்சுவலா எல்லார்ட்டயும் சொல்லிட்டுப் போலாம்னுதான் வந்தேன்."

அவள் பேசவில்லை. அவன் நெருக்கம். அவன் வாசனை. தன் கழுத்தின் மீது படர்ந்த அவனது இடது கை.

"நான் நாளைக்குப் பொறப்படறேன் வினய்."

அவள் எதிர்பார்த்த முத்தம்... சில்மிஷம்? இல்லை. அவன் கண்ணியம் கடைப்பிடித்தான்.

"அப்புறம் எப்ப?" - அவள் சுவாசம் அவன் மீது படர்ந்தது.

"தை மாசம்... தயாராயிரு... மாப்பிள்ளையாத்தான் வருவேன்."

அவள் பெருமூச்செறிந்தாள்.

நடுவிரல் நுனி தொட்ட மின்மினி, பயணம் முடிந்தது போல் நின்றது. பிறகு திகைத்து தலைகீழாக விரல் மீதே நகர்ந்தது.

அதன் சௌகர்யம் உத்தேசித்து அவள் உள்ளங்கையைத் திருப்பினாள்.

"இதை எங்கேருந்து புடிச்சே?"

"வீட்டுக்கெணத்துக்குள்ளே! தூக்கணாங்குருவி கூடு கட்டியிருக்கு. தூக்கி உன்னார பார்த்தேன். உள்ளே புளியங்கொட்டை அளவு களிமண்லே இதைக் குருவி ஒட்ட வச்சிருக்கு. ரிலீஸ் பண்ணிக் கொண்டு வந்தேன்" என்றாள் வினயா.

"பாவம் குருவி... இன்னிக்கு ராத்திரி அதுக்கு லைட் இருக்காது."

"ஆஆமாஆம்... நீ எவ்வளவு கெட்டிக்காரனோ அதவிட அது க்ளவர். வேற மின்மினி தேடிக்கும்."

"என்ன சொல்றே... நான் வேற மின்மினியைத் தேடிப்போவ்கறியா?"

"மாட்டியா என்ன? மைசூர்ல மின்மினிகளுக்கா பஞ்சம்?"

விநோத் கோபித்துக் கொள்ளவில்லை.

"இதுக்கு நான் என்ன பதில் சொல்லணும்?"

"ஆல்ரைட்.... ஓக்கேன்னு."

"அது மெய்யாக இல்லேன்னாலுமா?"

கழுத்திலிருந்த அவன் கை விலகி தோளில் ஒரு புறாப் போல் கனமின்றி அமர்ந்தது.

"த பார் விநோத்! இந்த தெய்வீகக் கதைகள்ளாம் வேணாம். அதெல்லாம் குட் ஓல்ட் கதைகள்."

சட்டென்று தன் கன்னத்தில் ஈரம்! கண்ணீரா?

"ஏய்... ஏய்... விநோத்! சும்மா விளையாட்டுக்கு..."

அவனிடம் பதில் இல்லை.

"விநோத்... விநோத்."

மௌனம். அவன் விளக்கைப் போட்டான்.

அவன் கர்ச்சீப்பால் முகம் துடைத்தான். "நான் வர்றேன்." வருத்தம் மறையாத சிரிப்பு. விடைபெற்றான். என்ன சொன்னோம்? ஏன் இப்படி ஆனான்...? அவன் போன பிறகு ஒரு மின்மினி வெளிச்சம். இதயத்தில் ஒட்ட வைத்த வெளிச்சம். ●



# சிரிப்பு வெடிகளின் பின்னணி என்ன?

'மற்ற நகைச்சுவை எழுத்தாளர்களைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், என்னைப் பொறுத்தவரை, என் வாழ்க்கையின் பல சந்தர்ப்பங்களில் நான் அனுபவித்த சோகம்தான் என்னை நகைச்சுவை எழுத்தில் ஈடுபட வைத்தது!' – என்று சமீபத்தில் சொல்லியிருப்பவர் உலகப் புகழ் பெற்ற அரசியல் நகைச்சுவை எழுத்தாளர் ஆர்ட் புக்வால்ட்.

இது என்ன விபரீதம் என்றுதான் பலருக்கும் தோன்றும். ஆனாலும் உளவியல் ரீதியாக இது உண்மைதான். அழுத்தமான சொந்த சோகங்களை மறைக்கவும் அல்லது அதிலிருந்து சற்றாவது விடுபடவும் நகைச் சுவைதான் கை கொடுக்கிறது.

அப்படியானால் சந்தோஷமாக இருப்பவர்களுக்கு நகைச்சுவை உணர்வே இருக்காதா? இருக்க முடியாதா? இந்தக் கேள்விகள் அனைவருக்குமே வரும். சந்தோஷமான மனநிலையில் இருக்கும்போது நகைச்சுவை உணர்வு வரும் தான். ஒரு நல்ல 'மூடை' உருவாக்கும் என்பதும் உண்மைதான். ஆனாலும் அது பிறரை வாய் விட்டும் மனம் விட்டும் சிரிக்க வைக்கிற அளவுக்கு இருப்பதில்லை என்பது தான் உண்மை.

சிறு வயதிலிருந்தே பெற்றோரிடம் சகஜமாகப் பேசுகிற குழந்தைகளைப் பாருங்கள். பெற்றோர் எதையாவது பேசும்போது ஏதாவதொரு வார்த்தையை 'ட்விஸ்ட்' செய்து நகைச்சுவை செய்து விடுவார்கள்!

'பெரியவங்க பேசும்போது இப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டுன்னு பேசாதே!' என்று கண்டித்து வளர்க்கப்படும் குழந்தைகளைப் பாருங்கள். அவர்கள் நாலு பேர் பேசுகிற இடத்தில் தங்கள் கருத்தைச் சொல்வதற்குக்கூட யோசிப்பார்கள். இந்த நிலையில் அவர்களுக்கு எங்கே நகைச்சுவை உணர்வு வர முடியும்? எனவே, சிறுவயதில் வளரும் சூழலும், நகைச்சுவை உணர்வு உருவாவதற்கு மிகப் பெரிய காரணமாக இருக்கிறது.

ஆனாலும் இது மாதிரியான நகைச்சுவையெல்லாம் பிறரின் உதடுகளில் ஒரு புன்னகையை மட்டுமே வரவழைக்கும். வெடிச்சிரிப்பை வரவழைப்பதில்லை. இங்குதான் ஆர்ட் புக்வால்ட் சொன்னது போல சொந்த வாழ்க்கையின் சோகங்கள் அல்லது வறுமை கை கொடுக்கிறது.

இன்னும் சில சமயங்களில் அறியாமை கூட சிலரை நகைச்சுவையாளர்களாக்கி விடும். பிறர் ஒரு விஷயத்தை ரொம்பவும் அறிவுபூர்வமாகப் பேசிக் கொண்டிருப்பார்கள். இந்த நகைச்சுவையாளர்களுக்கு அவர்களைப் போல அறிவு பூர்வமாகப் பேச வராது. ஆனாலும் அவர்கள் பேச்சில் தாங்களும் கலந்து கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் வரும். அப்போதுதான் அவர்களுடைய பேச்சுக்கு இடையில் ஏதாவதொரு விஷயத்தை அல்லது வார்த்தையை 'ட்விஸ்ட்' செய்து சீரியஸான

> நகைச்சுவை என்பது ஏதாவது ஒன்றை மறைக்கக் கையாளுகிற ஓர் உத்திதான். ஆனாலும் மற்றவர்கள் இதனால் மனம் விட்டுச் சிரிக்கிறார்கள் என்பதால், அவர்கள் எதை மறைக்க நினைக்கிறார்களோ அதில் வெற்றி பெற்று விடுகிறார்கள் என்பதும் உண்மை.

விவாதத்தை வெடிச் சிரிப்பு விவாதமாக்கி விடுவார்கள். இவர்கள் ஒரு ரகம். இன்னொரு ரகத்தினரும் இருக் கிறார்கள்.



சில அரசியல்வாதி களைப் பாருங்கள். ரொம்பவும் சீரியஸான விஷயமாக இருக்கும். பத்திரிகையாளர்கள் கேள்வி மேல் கேள்வி யாகக் கேட்டுத் துளைப் பார்கள். அந்தக் கேள்வி களுக்கெல்லாம் அவரால் பதில் சொல்ல முடியும் தான். என்றாலும் அப் படி அவர் மனம் திறந்து பதில் சொல்கிறபோது அவருக்கோ அல்லது கட்சிக்கோ தர்மசங்கடங் கள் ஏற்படக்கூடும். அத னால் தங்கள் பதில்களை அப் படியே நகைச்சுவையாக்கி விடுவார்கள். இதனால் பத்திரி கையாளர்களின் கேள்விகளுக்குப் பதில் சொன்ன மாதிரியும் ஆகும்; உண்மையைப் சொல்லாமல் தப்பித்ததாகவும் ஆகிவிடும்.

வேறு சிலரும் இருக்கிறார்கள். ஒரு வரைப் பற்றி விமர்சனம் செய்ய வேண் டும். ஆனால் நேரடியாகச் செய்ய முடி யாத சூழ்நிலை. ஒன்று அவர் கடுமையாகக் கோபித்துக் கொள்வார். அல்லது அவர் ரொம்பவும் மனமுடைந்து போகக் கூடும். இதற்கு ஒரே வழி நகைச்சுவைதான். அதனால் சொல்ல வேண்டிய விஷ யத்தைச் சொன்னதாகவும் ஆகும். அதே சமயம் சம்பந்தப்பட்டவரின் மனமும் புண்படாமல் தப்பித்து விடும். இதன் காரணமாகவும் சிலர் நகைச்சுவையைக் கையாளுவது உண்டு.

எப்படியானாலும் நகைச்சுவை என்பது ஏதாவது ஒன்றை மறைக்கக் கையாளுகிற ஓர் உத்திதான். ஆனாலும் மற்றவர்கள் இத னால் மனம் விட்டுச் சிரிக்கிறார்கள் என்ப தால், அவர்கள் எதை மறைக்க நினைக் கிறார்களோ அதில் வெற்றி பெற்று விடு கிறார்கள் என்பதும் உண்மை.

இந்த நகைச்சுவை உணர் வுக்கு ஆண்- பெண் பேதம் இருக் கிறதா என்றால் நிச்சயமாக இல்லை. ஆனாலும் பெண்களிடம் இந்த உணர்வு குறைந்து இருப்பது போல் தோன்றுவதற்கு என்ன காரணம்? சந்தே கமே வேண்டாம், நமது சமூகம்தான் கார ணம்.

'பொம்பளை சிரிச்சாப் போச்சு; புகை யிலை விரிச்சாப் போச்சு!' என்று பழ மொழிகளைச் சொல்லிச் சொல்லியே அவர்கள் பொது இடங்களில் வாய் விட் டுச் சிரிக்க முடியாதபடி செய்து விட் டது சமூகம். அப்படியே தப்பித் தவறிச் சிரித்து விட்டால், 'ஓ! அந்தப் பெண் ஒரு மாதிரி போல!' என்று சமூகம் - குறிப் பாக ஆண்கள் அவர்களைக் கொச்சைப் படுத்தி விடுகிறார்கள். இதன் காரண மாகவே அவர்களின் நகைச்சுவை ஊற்று அடைக்கப்பட்டிருக்கிறது. மற்றபடி ஆண் களுக்கு நிகராக அவர்களும் சிரிப்பு வெடி களை அள்ளி வீசத் தயாராகத் தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு மாத்திரம் சொந்த சோகங்கள் இல்லையா, என்ன! ●

**டாக்டர் எஸ். விஜயகுமார்**

"எப்படா ஆஸ்பத்திரியிலேர்ந்து கொண்டாந்து வீட்டிலே தள்ளுவோம்னு காத்துக்கிட்டிருந்தீங்களா?"

விநோத்தை மட்டும் எதிர்பார்த்த வினயா கட்டிலில் படுத்தவாறே பொறிந்து தள்ளினாள்.

பின்னாலேயே நயனதாரா. மைசூர் யூனிவர்ஸிட்டியில் விநோத்தின் சகா.

சங்கடமான முகத்தைச் சரிப்படுத்தி, "ப்ளீஸ் கம் இன்" என்று நயனதாரா வருவதை வினயாவுக்கு உணர்த்தினான்.

நர்ஸிங்ஹோமிலிருந்து டிஸ்சார்ஜ் செய்து அழைத்து வந்தவன், மூன்று மணி நேரம் காணாமல் போன எரிச்சலை வினயா ஒரு நாசூக்கு முகமூடியால் மறைக்க வேண்டி வந்தது.

நயனதாரா சிரிப்பினால் அந்தச் சூழலுக்கே ஒளியேற்றுவது மாதிரி வந்தாள். ஒரு கையில் 'பொக்கே'. இன்னொரு கையில் பிறந்திருக்கிற குழந்தைக்கு ஒரு கிஃப்ட்.

நயனதாராவுக்குக் கறுத்து அடர்ந்த இமைகள். பார்ப்பவர்களை ஒரு மயிலிறகு வருடும். ஒரு காந்த மையம் கவரும்.

சுருள்முடி. கண்டி இழுக்கும் உதடு. காஷ்மீர் நிறம். வினயாவுக்கு ஒரு தாழ்வுமனப்பான்மை எழும். ராஜகன்னிகையைச் சந்திக்கிற சேடிப்பெண் போல.

"ஹாப்பி வெட்டிங் டே!" நயனதாரா சிரித்துச் சிரித்து வினயாவின் உள்ளே திரண்ட அழுக்கைத் துரத்த முயன்றாள்.

அட, இன்னிக்கு செப்டெம்பர் நாலா? எனக்கு மறந்தே போச்சே! இவளுக்கு எப்படித் தெரியும்? விநோத் சொல்லாமல்.

"தாங்க்யூ" என்று சிரித்தவாறே பரிசுகளை ஏற்றாள்.

பக்கத்தில் தொட்டிலில் உறங்கிய மின்னியின் கன்னத்தை லேசாகத் தட்டிவிட்டு "ஹவ் நைஸ் எ பேபி" என்றாள் நயனதாரா.

"உட்காருங்கோ" என்று வினயா நாற்காலி காட்டினாள்.

பிறகு விநோத்தைத் திரும்பிப் பார்த்து, "இவங்களுக்கு ப்ரிஜ்லேருந்து ஐஸ் கொண்டு வாங்களேன்" என்றாள்.

"நோ... வேண்டாம்! இப்பத்தான் விநோத் ட்ரீட் குடுத்துச்சு..." – அவன் கண்களில் இங்கிதமான வெள்ளையான மறுப்பு.

மானச கங்கோத்ரி வாழ்க்கை. மழைக்குப் பிந்திய மைசூர் வெய்யில். புதிதாகப் பிறந்த குழந்தைகளின் சின்னஞ்சிறு அசைவுகள் கூட ஏற்படுத்தும் நிறைவு.

கால் மணி நேரம் பேசிக் கொண்டிருந்தாள். வினயாவுக்கு ஜலதரங்கம் கேட்ட மாதிரி இருந்தது. அவள் விடைபெற்றுச் சென்றபின் விநோத் நெருங்கினான்.

உறங்கும் சிசுவின் உச்சந்தலையில் உதடு பதித்தான். பின்பு தன் சட்டைப் பையிலிருந்து ஒரு மோதிரப் பெட்டி எடுத்துத் திறந்தான்.

தன் விரல் ஒன்றில் மாட்ட வந்த கையை வினயா உதறினாள்.

"என்னோட மேரேஜ் டே! எனக்கே ஞாபகமில்லே. எவளுக்கோ ஞாபகமிருக்கு. இவ்வளவு நேரம் அவளோட போய்ச் சுத்திக் கூத்தடிச்சதுக்கு இப்படி ஒரு லஞ்சமா?" வினயா வெடித்தாள்.

"அவ எவளோ இல்லே. என்னோட கலீக்."

"எதுல... உங்க செக்ஷுவல் லைஃப்லயா?"

அவன் பளீரென்று கன்னத்தில் அறை விழுந்த மாதிரி உதடுகளை இறுக்கினான்.

"வினயா... நீ ரொம்ப 'வீக்'காயிட்டே!"

"ஷ்ஷ்... இந்த 'சஜோல்'லாம் வாணாம்."

"ஆல்ரைட்... நான் என்ன சொல்லணும்?"

"எங்கே போனீங்க இவ்வளவு நாழி?"

இது நம்மோட மூணாவது திருமண நாள். ஒனக்கு ஒரு சின்ன சர்ப்ரைஸ் கிஃப்ட் தர நயனாவை அழைச்சுட்டு

**வையவன்**

ஜுவல்லரிக்குப் போனேன். செலக்ஷன்ல நான் எவ்வளவு புவர்னு ஒனக்கே தெரியுமே!"

"நோ.. நோ... யூ ஆர் நாட் புவர். நயனதாராவை செலக்ட் பண்ணியிருக்கீங்களே."

மோதிரப் பெட்டியை உள்ளங்கையில் மடித்து அவன் மார்பில் குறுக்கே கைகட்டி நின்றாள்.

"என்னை லவ் பண்றதுக்கு முன்னாடியே இவளோட ஒங்களுக்குச் சகவாசம்... உண்மைதானே!"

அவன் அவளைச் சலனமின்றிப் பார்த்துத் தலையசைத்தான்.

"யூ லவ்ட் ஹெர்!"

இப்போது அவன் இறுகிய முகம் நெகிழ்ந்தது. மெதுவாக உறுதியாகச் சொன்னான்.

"இப்பவும் கூட."

"இப்படிச் சொல்ல ஒங்களுக்கு வெக்கமால்லே?"

"உண்மை வெட்கப்படாது வினயா."

"தென் கெட் அவுட். போங்கோ... ரெட்டை வேஷம் வேண்டாம். போய் அவளோடேயே பொழையுங்கோ. டிவோர்ஸுக்கு நான் தயார்."



காலியாக இருந்த நாற்காலியில் வந்து உட்கார்ந்தான். லாபரட்டரியில் சுடர்விடும் ஸ்பிரிட் விளக்கைப் பரிசீலிப்பது போல் அவளையே பார்த்தான்.

"வினயா... நான் உன்னை 'லவ்' பண்ற விஷயத்தை மொதமொதல்ல இவகிட்டதான் சொன்னேன். அவதான் என்கரேஜ் பண்ணினா... அவதான் தைரியம் கொடுத்தா."

அவள் வியப்போடு விநோத்தைப் பார்த்தாள்.

"லவ்! ஒனக்கு ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் மத்தியிலே... ஒரே குறுகலான அர்த்தம்தான் தெரியும். ஒனக்கு பொஸஷன். அதான் பொறாமை. அதான் எல்லாம் மஞ்சள் காமாலைக் கண்ணாத் தெரியறது."

அவன் இத்தனை யையும் சுடாமல் இதமாகப் பக்குவமாகச் சொன்னான்.

அவள் அவன் கண்களைப் பார்த்தாள். சத்தியம் சிரித்தது. இதயத்தில் ஒட்ட வைத்திருந்த ஒரு மின்மினியை அவள் விடுவித்தாள். ●

**ஈராக் வசம் பயங்கர உயிரியல் - இரசாயன ஆயுதங்கள் உள்ளதாகவும் அவற்றைச் சோதனையிட ஐ.நா. அதிகாரிகளை ஈராக் அனுமதிக்க வேண்டும் என்றும் அமெரிக்கா வலியுறுத்திய விஷயம் நம் எல்லோருக்கும் தெரியும். இந்த உயிரியல் இரசாயன ஆயுதங்கள் மிக்க கொடுமையானவை....**

# இரசாயன - உயிரியல் ஏற்படுத்தும்

குர்டிஷ் மக்களுக்கு எதிராக, இராக்கிய அதிபர் சதாம் ஹுசைன், இரசாயன ஆயுதங்களை உபயோகித்து நூற்றுக்கணக்கானோரைக் கொன்று விட்டதாக 1988ம் ஆண்டு குற்றம் சாட்டப்பட்டது!

இன்றும் சீனா, லிபியா, வடகொரியா உட்பட சுமார் பதினாறு நாடுகள் இது போன்ற தடை செய்யப்பட்ட நச்சு ஆயுத உற்பத்தியில் மறைமுகமாக ஈடுபட்டு வருகின்றன. கடந்த 95-ல் ஜப்பானில், ஓம் ஷின்ரி க்யோ என்னும் பயங்கரவாதி, நரம்பு - வாயு (Nerve gas) வின் மூலம் பத்துக்கும் அதிகமான பொது மக்களைக் கொன்ற சம்பவம் நினைவிருக்கிறதல்லவா! அது, இரகசிய உயிர்க் கொல்லி ஆயுதங்களின் தயாரிப்பு ரகசியம் தனிப்பட்ட பயங்கரவாதிகளின் கைகள் வரை போய்விட்டதற்கு ஓர் அடையாளம் என்று அஞ்சப்படுகிறது.

இரசாயன ஆயுதங்களின் பிரயோகம் முதலாம் உலகப் போரினை ஒட்டியே உருவானதாகும். அப்போது குளோரின் மற்றும் மஸ்டார்ட் வாயுக்கள் போர் முனைகளில் பங்காற்றி வந்தன.

ஆனால், இரண்டாம் உலகப் போர் ஆரம்பமாவதற்குச் சில வருடங்கள் இருக்கையில், ஏற்கெனவே உபயோகத்தில் இருந்த இரசாயன



ஆயுதங்களை விடவும், சக்தி வாய்ந்த ஆயுதங்களை நாடி, ஜெர்மானிய இராணுவத்துறை ஆராய்ச்சிகளில் ஈடுபட்டது.

1936-ம் வருடம் கெர்காட் ஷிராடெர் (Gerhard Schrader) என்பவரது மூளையில், புதிய நச்சு வாயுவொன்றை ஆயுதமாக உபயோகிக்க முடியும் என்னும் அபார (?) சிந்தனை உதித்தது! நரம்பு வாயு எனப்படும் நெர்வ் கேஸ் (Nerve gas) இவரது ஆராய்ச்சிகளின் விளைவாய் அறிமுகமானதுதான். சாரின் (Sarin), விஎக்ஸ் (VX) என்னும் பெயர்களில் உலா

# ஆயுதங்கள் பயங்கரங்கள்!

வரும் அதிபயங்கர ஆயுதங்களின் தோற்றமும் இதிலிருந்தே ஆரம்பமானது.

சாதாரண குளோரின் வாயுவை விட நூறு மடங்கு முதல் ஆயிரம் மடங்கு வரையிலான நச்சுத்தன்மை கொண்ட இந் நரம்பு வாயுக்கள், உடலின் தசைகளுக்கு மூளை இடும் கட்டளைகளை எடுத்துச் செல்லும் நரம்புகளைச் செயலிழக்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது. தசையின் இயக்கத்துக்கு வேண்டிய என்ஸைம்களின் உற்பத்தியை முற்றாக அழித்துவிடும் இவ்வாயு, உதர விதானத்தை (diaphragm) இறுக்கமடையச் செய்வதன் மூலம் மூச்சுத் திணறலை ஏற்படுத்தி, மரணத்தையும் உண்டாக்கும் வல்லமை பெற்றது. சாரின் மற்றும் VX ஆகியன சருமத்தின் உள்ளே ஊடுருவித் தாக்கும் திறன் படைத்ததாக விளங்குகின்றன. அதே சமயம், இவற்றை உற்பத்தி செய்ய உபயோகமாகும் பொருட்களை இறுதி நேரம் வரை தனித்தனியே பிரித்து வைத்திருக்க முடியுமாகையால், அபாயமின்றி இதனை ஓரிடத்தில் இருந்து பிறிதோரிடத்துக்குக் கொண்டு செல்வதும் சுலபம்.

இரசாயன ஆயுதங்களைப் போன்று, உயிரியல் ஆயுதங்கள் உடனடி பாதிப்புகளை உருவாக்குவதில்லை. ஆனால் உயிரியல் ஆயுதங்களால் உண்டாகும் பாதிப்பு பல எதிர் விளைவுகளைத் தோற்றுவிக்கக் காரணமாகி விடுகின்றன. சில 'கிராம்' எடை கொண்ட உயிரியல் நச்சுப் பொருள் மூலம் ஏற்படும் அழிவு ஒரு டன் 'நரம்பு வாயு'வினால் உண்டாகும் அழிவை விடவும் பலமடங்கு அதிகமாக இருக்கும் எனக் கண்டுள்ளனர்.

ஒரு டெஸ்ட்டியூப்பில் அடைக்கப்பட்டிருக்கும் பயங்கர உயிரியல் ஆயுதத்தால், பல்லாயிரம் மக்களை மட்டுமின்றி, அது பிரயோகிக்கப்பட்ட பிரதேசத்தின் உயிர் வாழ்க்கையையே பல வருடங்களுக்கு மாற்றியமைத்து விட முடியும்.

இவ்வுயிர் ஆயுதங்களினால் மற்றுமோர் ஆபத்தும் உள்ளது என்கிறார்கள். உயிரியல் ஆயுத உற்பத்திக்கான பொருட்களை, ஐநாவின் போராயுத நிபுணர்கள் வருகை தரும் சமயத்தில் மட்டும் அழித்து விட்டு, அவர்களது சோதனை முயற்சிகள் யாவும் முடிவடைந்த பின்னர், ஒரு வார காலத்தில் மீண்டும் உற்பத்தி செய்துவிட முடியும்! இவ்வகையில், இது அணு ஆயுதங்களை விடவும் கொடியதாகும் எனக் கருத்துரைக்கிறார் ஐ.நா. ஆயுதக் குழு நிபுணர் ஒருவர்.

இன்று - இராக் வசம் ஏறத்தாழ 8000 லிட்டர் அன்திராக்ஸ் (Anthrax) எனும் உயிர்க் கொல்லி ஆயுதமும் சுமார் 20,000 லிட்டர் போடொக்ஸ் (Botox)வும் இருப்பதாக நம்பப்படுகிறது.

இவற்றுள் அன்திராக்ஸ் - சுவாசத்துடன் சேர்ந்து உள்ளிழுக்கப்படும் பயங்கர பாக்டீரியாவைக் கொண்டதாகும். இவ் வாயுவின் தாக்கம், இரண்டு முதல் நான்கு நாட்களுக்குள் வாந்தி, காய்ச்சல், தொடர்ந்து மூச்சுத் திணறல் என்பவற்றை ஏற்படுத்தி முடிவில் இறப்பைத் தழுவச் செய்யும்.

'போடொக்ஸ் நரம்பு மண்டலத்தைச் செயலிழக்கச் செய்வதுடன், மாரடைப்பையும் ஏற்படுத்தும். 'பொட்டிலிஸம் பாக்டீரியா' (Botulism Bacteria) மூலம் பெறப்படும் இப் பொருள், அமெரிக்காவிடமிருந்து இராக் பெற்றுக் கொண்ட உயிரியல் ஆயுதம் என்பது குறிப்பிடத்தக்கது!

ஃபொஸ்ஃபீன் ஆக்ஸைட் (Phosphine Oxide) நரம்பு வாயு, சாரினைப் போன்று நூறு மடங்கு வலிமை வாய்ந்தது என்று சொல்லப்படுகிறது. இது உடலை உடனடியாக உணர்விழக்கச் செய்து, சாவின் பிடியில் தள்ளிவிடும் வலிமை பெற்றதாகும். VX எனும் பெயரில் அழைக்கப்படும் பயங்கர இரசாயன ஆயுதம் இது.

இவற்றின் காரணமாகவே அறிவியல் ஆய்வுகள் மூலம், 'தப்பிப் பிறந்த' முரட்டுக் குழந்தைகளான இந்த உயிரியல், இரசாயன ஆயுதங்களை ஒரு கட்டுக்குள் கொண்டுவருவதற்கு, இன்று பல நாடுகள் முயன்று கொண்டிருக்கின்றன.

இராக் இதுபோன்ற பயங்கர ஆயுதங்களை மறைத்து வைத்துள்ளதாக ஐநா சொல்கிறது. சதாம் ஒப்புக் கொள்வாரா என்ன...?!

— சர்வசித்தன்



தூக்கம் வராத இரவுகள் தொடங்கியது என்று?

மொட்டை மாடியில் புறங்கைகளைத் தலைக்குப் பின் கோத்து யோசித்தான் விநோத்.

நட்சத்திரங்கள் இப்போதெல்லாம் அவனிடம் அடிக்கடி பேசுகின்றன. அடிக்கடி உறக்கம் கலைந்து விடுகிறது.

தொட்டு உலுக்கினாலும் கலையாத தூக்கம் நயனதாராவோடு போய் விட்டதா?

கீழே பெட்ரூமில் வினயா படுத்திருக்கிறாள். எழுந்து வந்ததைக் கவனித்திருப்பாளோ? இருக்கலாம். விசாரிக்கச் சோம்பலுற்றுத் திரும்பிப் படுத்திருக்கலாம்.

அவளுக்கும் வேலை; ஒழியாத வேலை. மின்னி வளர்ந்து விட்டாள். ஜெகனும் வளர்ந்து விட்டான். விழித்து எழுந்ததும் அவர்களுக்குப் பிரஷ்ஷில் பேஸ்ட் பிதுக்கி நீட்டுவது முதல் இரவு ஜெகன் வாயிலிருந்து அவன் சூப்பும் விரலை அகற்றி, குப்புறக் கவிழ்ந்து படுத்திருக்கும் மின்னியின் முகம் திருப்புவது வரை ஒன்று தொடர்ந்து ஒன்றாகச் சங்கிலி கோத்த வேலைகள்.

அத்தோடு இப்போது ஆபீஸ் சேர்ந்து கொண்டது. ஆச்சா போச்சாவென்று சமையல் கட்டிலிருந்து விடுபட்டு ஆபீஸுக்கு ஓடும் ஓட்டம்.

"வேலையை விட்டுடு வினயா!"

பலமுறை சொல்லிப் பார்த்து விட்டான். இரண்டு பேரும் ஓடி உழன்று சம்பாதிக்கிற பணம் நாலு பேருக்காகக் காட்டும் ஆடம்பரத்தில் கரைவதைச் சுட்டிக்காட்டினான்.

# அவளும் அவனும்

வையவன்

“விநோத், வெறுமே பணம் சம்பாதிக்கத்தான் ஆபீஸ் போறேன்னு நெனைக்கறீங்களா?”

அவளுக்கும் தெரியும். அவன் அவ்வளவு முட்டாளல்ல. இருந்தும் சொன்னாள். “எனக்கு வேற ஒரு உலகம் வேண்டியிருக்கு!”

அவள் மேலும் வளர்த்தாள்.

“நேத்திக்கு மீனாட்சி பட் வீட்ல என்ன நடந்தது தெரியுமா? இஸ்திரி வண்டிக்காரி அயர்ன் பண்ணிக் கொண்டு போன துணிகளை எல்லாம் தேச்சு வீடு வீடாக் கொண்டு போய்க் கொடுக்க வந்திருக்கா. திடீர்னு ஒரே இடி மின்னல். பயந்து போய் மீனாட்சி பட் வீட்டிலே வச்சுட்டுத் திரும்பிட்டா.

“ராத்திரி பேஞ்ச மழையிலே மீனாட்சி தெருவிலே ஒவ்வோர் வீட்லயும் தண்ணி உள்ளே பூந்துட்டது. சோபா.. ப்ரிஜ்... வாஷிங் மெஷின் எல்லாம் ஹோகயா.

“சலவைத் துணி கதியைச் சொல்லவே வேணாம். பாவம் சலவைக்காரி! மறுபடியும் எடுத்துட்டுப் போய் அவளா மெனக்கெட்டுத் துவைச்சு அயர்ன் பண்ணிக் கொண்டு வந்திருக்கா. மீனாட்சி தெருவிலே ஒவ்வொரு வீட்லயும் தண்ணிதான் விஸிட்டர்.”

எதற்கு இந்தக் கதை? எதைத் தொட்டு, ஏன் வளர்க்கிறாள்?

“வெளியே வேற உலகம். நோ, பல உலகங்கள் இருக்கு விநோத். நாலு சுவர் தாண்டி, இந்த நாலு சுவரை நிக்கவைக்கப் படாத பாடுபடற உலகங்கள் சொழல்றது. எந்த மையப் புள்ளியிலே எந்தெந்தத் தொடு கோணங்கள்ளே நம்ப நாலு சுவர் நிக்கறதுன்னு புரிஞ்சுக்க வேணும். எனக்கு வேணும். ஆபீஸ் ஒரு லெவல் க்ராஸிங்.”

இப்போதெல்லாம் வினயா அன்றாடம் வளர்கிறாள். வளர்ந்து கொண்டே வருகிறாள். அவள் வளர வளரத் தன்னை விட்டு விலகிக் கொண்டிருப்பது போல் விநோத்துக்குள் ஒரு தனிமை.

பழைய நாட்களில் இப்படித் தூக்கம் கலைந்து மொட்டை மாடிக்கு வந்தால் ஐந்தாவது நிமிஷம் குட்டியைத் தேடும் தாய்ப் பூனை மாதிரி பின் தொடர்ந்து வருவாள்.

இப்போது தலை தூக்கிப் பார்த்து விட்டுப் படுத்து விடுகிறாள். அலட்சியம் அல்ல. களைப்பு.

விநோத்தின் மனசில் ஓர் ஆந்தை இப்போது அடிக்கடி உட்கார வருகிறது. கொட்டக் கொட்ட அவனையே பார்க்கிறது. விரட்ட முயன்றாலும் போக்குக் காட்டிவிட்டு மீண்டும் வருகிறது. உட்கார்கிறது. பேசுகிறது.

‘நீ தனிமையுற்றுப் போனாய் சகோதரா! என் பெயர் ஆதி துக்கம். நானும் நீயும் ஒரே வார்ப்பு. இங்கயேதான் ரொம்ப நாளா இருக்கேன். நீ கண்டுக்கிட்டதே இல்லே.

நயனதாரா இருந்தா. நீ என்னைக் கண்டுக்கலே அப்புறம் வினயா.. சுத்தமா மொகம் திருப்பிட்டே.

நயனதாரா இப்போ நட்சத்திரத்திலே சேர்ந்துட்டா. வினயா இப்போ விவேகி ஆயிட்டா. ஹிஹ்ஹி லெட்ஸ் மீட் நௌ!’

## அருள்வாக்கு

ஆசைக்கும் துவேஷத்துக்கும் காரணம் அகங்காரம். அகங்காரம் தொலைந்தால் எந்தக் காரியங்களிடையிலும் உயர்வு தாழ்வு தெரியாது. நாம் பாட்டுக்கு நம் கடமை இது என்ற உணர்ச்சியோடு ஆனந்தமாகச் செய்து கொண்டிருப்போம். லோகம் க்ஷேமமாக இருக்கும். 'நான் செய்கிறேன்! எனக்காகச் செய்து கொள்கிறேன்' என்கிற அகம்பாவம் இல்லாமல் கடமையைச் செய்து பலனை ஈசுவரனுடைய பாதத்தில் அர்ப்பணம் பண்ணுவதுதான் கீதை சொல்கிற கர்ம யோகம். சொந்த விருப்பு வெறுப்பில்லாமல், லோக க்ஷேமார்த்தமாகக் காரியம் செய்து ஆத்ம பரிசுத்தி பெறுகிற இந்தப் பண்பாடு வேத காலம் தொட்டு நம் தேசத்தில் தழைத்து வந்திருக்கிறது. அந்தப் பண்பாட்டை ஒரு கையடக்கமான பேழையில் போட்டுக் கொடுத்த மாதிரி கீதையில் அநுக்கிரகம் செய்திருக்கிறார் கிருஷ்ண பரமாத்மா.

இந்த உபதேசத்தை நம் வாழ்க்கையில் ஒவ்வொரு காரியத்திலும் உரைத்து உரைத்து அலசிப் பார்க்கவேண்டும். ''இந்தக் காரியத்தில் சொந்த லாபம், பேர், புகழ் இருக்கிறதா? பட்சபாதம் இருக்கிறதா? இவை இருந்தால் வெளிப்பார்வைக்கு நாம் செய்வது எத்தனை உயர்வாக இருந்தாலும் அது பாபம்தான்'' என்று நாம் செய்கிற ஒவ்வொரு செயலையும் அலசிப் பார்க்க வேண்டும். நமக்கு என்று நாமாக ஆசைப்பட்டு ஒரு காரியத்தை உண்டாக்கிக் கொண்டால் அதைச் சாதித்துக் கொள்வதில் அநேகத் தப்பிதங்கள் வந்து கொண்டேதான் இருக்கும். அதனால் அவரவருக்கும் சாஸ்திரம் வைத்திருப்பதே காரியம் என்று கிருஷ்ண பரமாத்மா சொன்னாற் போல் அதையே பிரமாணமாக வைத்துக் கொள்ள வேண்டும். சமமான அன்புடன் இருந்து கொண்டு சுத்தமான எண்ணத்தோடு அவரவரும் இப்படித் தன் கருமத்தைச் செய்தால் சமூகத்தில் போட்டி, பொறாமை, சண்டை, சச்சரவு எதுவுமே இருக்காது. லோகமே இன்ப மயமாக இருக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

மன ஆந்தை பேசவில்லை. அலறியது.

சட்!

விநோத் எழுந்தான். நேரே நடந்து எதிர்ப் பக்கக் கைப்பிடிச் சுவருக்குப் போனான். தூரக் கிழக்கில் அந்த மயானம். இப்போதும் ஒரு பிணம் எரிகிறது. தீவட்டி வெளிச்சம் போல் பிணம் எரியும் ஜ்வாலை.

இதே மயானத்துக்குத்தான் ட்ராமா கோர் யூனிட்டிலிருந்து நயனதாராவையும் கொண்டு போனார்கள்.

டில்லி தியேட்டர் தீப்பிடித்ததில் தன் சகோதரனும் செத்ததாக ஒரு மழு ஏந்திய மௌன பாரத்தோடு சொன்ன அதே நயனதாரா ஒரு நாற்சந்தி விபத்தில் போய் விட்டதாகச் செய்தி வந்து விநோத் போனான். மயானம் வரை போனான்.

திரும்பி வீடு வந்து தலை முழுகும்போது வெந்நீர் விளாவிக் கொண்டே வினயா சொன்னாள்.

''ரொம்ப அப்செட் ஆகாதீங்க. நார்மலா எடுத்துக்கோங்க.''

நயனதாராவுக்கும் தனக்கும் மத்தியில் என்னென்ன...? எவ்வளவு? எல்லாம் தெரிந்தவள் வினயா. எனினும் மறக்கச் சொல்கிறாள்.

ஒரு பெண்ணாக அல்ல. ஒரு மனைவியாக அல்ல. ஒரு மனுஷியாக. சர்வசாதாரணமாக.

'வினயா... நீ ஏன் இப்படி வளர்ந்து கொண்டு போகிறாய்? நார்மலா இரேன். எவளோ ஒருத்தி செத்தாளேன்னு புருஷங்காரன் உருகறியே. பொண்டாட்டி நான் ஒருத்தி கல்லாட்டம் இருக்கேன். நீ உருப்படுவியான்னு சபியேன். பொறாமையே தகிக்கப் புகையேன். வாயிலும் வயித்திலும் அடிச்சுக்கயேன்.'

'அப்ப நான் ஒங்கூட மல்லுக்கட்டிப் போராட்றப்ப ஒரு மாறுதல் வந்து நயனதாரா நெனைப்பை மாத்திக்குவனே.'

இதை அவளிடம் வாய்விட்டுச் சொல்ல முடியாது. நீ ஏன் வளரவே மாட்டேங்கறே விநோத்துன்னு ஸ்கூல் டீச்சர் மாதிரி பார்ப்பா.

அல்லது, 'உன் காதல் செத்துப் போச்சு விநோத்! நீ என்னைச் சார்ந்திருக்க ஆரம்பிச்சுட்டே. நையி நையின்னு என்னண்டயே சுத்தி வர்றே. சார்ந்திருப்பதற்குப் பெயர் காதல் இல்லே. அது அடிமைத்தனம். காதல் சுதந்தரமானது. அது உபகிரகம் அல்ல. தானாய் ஒளிவிடும் தனி கிரகம் என்று தத்துவ

முத்துக்களாக எடுத்துத தட்டில் வைக்க ஆரம்பித்து விடுவயாம்.'

'அந்த இரண்டினாலும் மன ஆந்தை வெளியேறாது.

விநோத் தூரத்தில் எரியும் பிணத்தின் ஜ்வாலையையே உற்றுக் கவனித்தான். அதனிடம் கேட்டான்.

காதல் என்பது என்ன?

தெரிந்த அர்த்தங்கள், பழக்கங்கள், சுவைகள், படியவைத்த படிமங்கள், பிரமைகள். எல்லாம் அந்தக் கேள்வியில் கல்வீச்சில் திடீரென்று விலகி, நிறமற்ற சுத்த ஜலம் தெரிந்தது.

காதல் காதல் காதல்.... காதல் போயிற் சாதல் சாதல் சாதல் என்று ஏன் சொன்னான் மகாகவி.

அது போய் விட்டதா?

வழிதெரியாத காட்டின் வெட்டவெளியில் நிற்கும் திகைப்பில நின்றான் விநோத்.

தூரத்தில் ஒரு நாய் குரைப்பதும் பாரா உஷார் என்று மானச கங்கோத்ரியின் கூர்க்காக் குரலும் கேட்டன.

பின்னால் காலடிச் சப்தம் கேட்டது. திரும்பினால், வினயா.

"என்ன இன்னிக்கும் தூக்கம் வரலியா?'' என்று இரண்டு கைகளையும் பின்னால் வளைத்து சோம்பல் முறித்து தூக்கக் கலக்கம் விலகாமல் நின்றாள்.

"ஆமாம்."

"நயனதாரா?"

"............"

"லீ விநோத்! கான் ஈஸ் கான். ஒங்களை நான் மறக்கச் சொல்லலே. அவஸ்தைப் படுத்திக்கணுமா?"

"..........."

"ஆயிரம் நடக்கறது. மீனிங்ஃபுல் அண்ட் மீனிங்லெஸ். அதை அதை அப்பப்ப ஒரு லாக்கர்ல வச்சுப் பூட்டிட வேண்டியது தானே!"

உனக்கு முடியலாம் என்று சொல்ல நினைத்தான்.

"ஒங்களுக்கு ஆண்ட்டி டிப்ரஸெண்ட் மாத்திரை தேவைப்படறது. நாளைக்கு ஒரு சைக்கோதெரபிஸ்ட்டைப் போய் கன்ஸல்ட் பண்ணுவம்!"

விநோத் தனக்குள் கசப்பாகச் சிரித்தான். கனத்த பிரேம் மாட்டிய ஹைபவர் கண்ணாடி பின்னே தெரியும் சைக்கோதெரபிஸ்ட்டின் கண்கள் தெரிந்தன.

காதல் என்பது என்ன டாக்டர்?

கேட்டால் ரியாக்ஷன் எப்படி இருக்கும்?

வினயா அவனை நெருங்கினாள்.

நட்சத்திர வெளிச்சம் மட்டும் தெரிந்த அரையிருளில் மூன்று விரல்களால் அவன் மோவாயை உயர்த்தினாள்.

"ப்ச்... ப்ச்.... ப்ச்..." என்று இது சரியில்லை என்பது போலப் பரிவோடு உரிமையோடு தலையசைத்தாள்.

நெருங்கி வந்து அவன் கழுத்தைச் சுற்றிக் கை கோத்து அணைத்தாள். பிறகு அவன் முகத்தை அருகே இழுத்துத் தன் அதரங்களின் மீது அவன் உதடுகளைக் கவிழ்த்துக் கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து விலகினான். பெருமூச்சு விட்டாள்.

"நேரமே கெடைக்கறதில்லே விநோத்!"

எதைச் சொல்கிறாள்? எதற்குச் சொல்கிறாள்.

"நீங்க லோன்லியாய்ட்டது புரியறது. ஆக வேண்டாமே. அவசியம் இல்லியேன்னு தோணும். எல்லாம் இயற்கையாச்சே. வருத்திக்கலாமான்னு சொல்லத் தோணும். சொன்னா சரிப்படாது. ஒருவேளை யூ மே நீட் இட். கொஞ்ச காலத்துக்கு."



"என்ன ஆச்சு?''
"குழந்தை அழுவது?''
"ஒரு தட்டு தட்டு. நீ குழந்தையா இருக்கும் போது தான் அதான் செய்தேன்!''
— என்.வி. ரமணி

விநோத், அவள் நேற்றை விட இன்று வளர்ந்திருப்பதை ஒரு பயம் கலந்த வியப்போடு கவனித்தான்.

"விநோத்... விநோத்... விநோத்... ஐ ஆல்வேஸ் லவ் யூ விநோத். நூறு நயனதாரா வரட்டும் போகட்டும். ஐ வில் லவ் யூ."

வினயா திடீரென்று உடைந்தாள். விம்மத் தொடங்கினாள்.

"வினி... வினி..." என்று அவன் பதறி அவளை அணைத்துக் கொண்டான்.

அவன் மனசில், அந்த ஆந்தை பறந்து விட்டிருந்தது.

தாளிக்கிறது வெறும் மணத்துக்கு மட்டும்தான்னு ஜம்பமா உக்காந்து வாசனை பிடிக்க வேணாம். கடுகு, உளுந்து போட்டதும் துள்ளுகிற ஜாலங்கள் மாதிரியே அதுல மகத்துவமான சத்துக்களும் குதிக்கிறதா நெனச்சுக்கங்க. என்னடா, சுமி திடீர்னு மேஜிக் காட்டுறாளேன்னு தோணுதா? இந்த காம்பினேஷனைக் கண்டு பிடிச்ச நம் முன்னோர்களைத்தான் தேங்க் பண்ணனும். பசிக்கு சாதத்தோட சாம்பாரைக் கலந்து பிசைஞ்சு உள்ளே தள்ளுனா பத்தாதா? தாளிக்கிறதெல்லாம் எக்ஸ்ட்ராதானேன்னு நினைக்க வேணாம்.

'நான்வெஜ்' ஹோட்டல்கள்ல பார்த்திங்கன்னா பல்லுக்குத்துற குச்சிகளோட (பெருஞ்) சீரகத்தத்தான் கிண்ணியில வச்சிருப்பாங்க. ஏன் வச்சிருக்கோம்னு அவங்களுக்குத் தெரியுமோ என்னவோ. அள்ளி வாயில போட்டுக்கிட்டு போற பலருக்குச் சுத்தமாத் தெரியாது. சீரகத்தை மென்னு சாப்பிட்டா வயித்தில பூச்சியோட அராஜகம் அமுங்கிப் போயிடும். கிராமத்தில குஞ்சங் குஞ்சமா காச்சு நிக்கிற சீரகக் கொத்த பிடுங்கிப் பச்சையாத் திங்கிறதப் பாத்திருக்கேன். சீரகத்தப் போட்டு சாம்பாரைத் தாளிக்க லேட்டாகுதா? கவலைய விடுங்க. சீரகத்த மாவா அரச்சு கடவு பவுடர்ன்னு கடையில கிடைக்கிது. வாங்கிக்கலாம்.

சுடுதண்ணியில சீரகத்தப் போட்டு அரைமணி நேரம் வையுங்க. அந்தத் தண்ணிய குழந்தைகளுக்குக் கொடுத்தா வயித்துப் பூச்சிகள் செத்துப் போகும். அப்புறமா 'புத்தம் புது பேண்ட் சின்னதானதேன்? நான் வளர்கிறேனே மம்மி. ஐ. ஆம்



சீரகச் சாறு பாய். ஐ. ஆம் சீரகச்சாறு கேர்ள்'ன்னு உங்களப் போட்டு இம்சைப் படுத்தினா அதுக்கு நான் பொறுப்பில்லை.

**நா**ம கடுக மணத்துக்குப் பயன்படுத்துறோம். ஆனா வட நாட்டுக்காரங்க, உடம்புக்குள்ள ஒரு தகதகப்பைக் கொடுக்கிறதாலதான் அத அதிகமா பயன்படுத்துறோம்னு சொல்றாங்க. குளிரில உடம்பு வெட வெடக்கிறதை நாம போட்டிருக்கிற டிரஸ்ஸுதான் தடுக்குதுன்னு நெனைக்க வேணாம். கடுகு அதுக்கு ரொம்பப் பயன்படுதுங்கராங்க. உளுந்து உடல் வலுவைக் குடுக்குது.



சமைக்கறீங்களேன்னு வீட்டுல புருஷன்கிட்டே சலிச்சுக்க வேணாம்! ஓடிக்குதிச்சு விளையாடுற குழந்தைகளுக்கு கண்டிப்பா கொழுப்புச் சத்து வேணும். அதனால எண்ணெய்யை ரொம்பவும் குறைச்சிடாதீங்க.

கொத்தமல்லி விதைகளையும் (தனியா) நிறையப் பேரு மறந்திடுறாங்க. மாடு மேயற மாதிரி ரெண்டு கொத்தமல்லி தழையைப் பச்சையாவே வாயில போட்டு மென்னு சாப்பிடுங்க. அதிலயும் வைட்டமின் 'A' இருக்கு. மத்தவங்க ஒரு மாதிரி பாப்பாங்கன்னு வெக்கப்பட்டா சட்னி பண்ணிச் சாப்பிடுங்களேன். சட்டினின்னுதும்தான் எனக்கே ஒண்ணு ஞாபகம் வருது. ஜீரணத்துக்கு படுசூப்பரான ஒரு விஷயம்.

காய்கறிகள்ல இருக்கிற நார்ச்சத்து வயத்துக்குள்ள போய் அத்தனை சீக்கிரம் கரைஞ்சு ஜீரணமாயிடாது. ஆனா, வெந்தயம் வயித்துக்குள்ள போனதும் நார்ச்சத்து தானா ஜீரணமாகும்னு சொல்றாங்க நிபுணர்கள் அமுதாவும், விஜயாவும். அது ரத்தத்தில அதிகமா இருக்கற சர்க்கரையையும் தடால்னு குறைச்சு பேலன்ஸ் பண்ணிடும்.

# தாளிப்புக்கு தேங்க்ஸ் சொல்லுங்க!

சும்மா நேரம் போனது தெரியாம தாளிச்சுக்கிட்டே இருந்தா கருகல் வாசனை வரும். கறிவேப்பிலை, கடுகு, சீரகம் போட்டு தாளிக்கிறதில பக்குவம்தான் முக்கியம். கறிவேப்பிலையை ரசத்தில போட்டாலும், தயிரில போட்டாலும் வெளில எடுத்துப் போட்டுடுறாங்க. அது ரொம்பவும் தப்பு. கறிவேப்பிலையை நல்லா மென்னு சாப்பிடுங்க. அதில வைட்டமின் 'A' இருக்கு. ஜீரணத்துக்கே சக்தி கொடுக்குதுன்னா பார்த்துக்கங்களேன்!

**எ**ண்ணெயில கொழுப்பிருக்குன்னு சுமி சொன்னப்புறமும் எண்ணெய் ஏராளமாப் பயன்படுத்திச்

கொழுப்பைக் குறைக்க வெந்தயம் நல்லதுங்கிறதை எப்படியோ பாட்டிங்க கண்டு வச்சிருக்காங்க. அவங்க இன்னொண்ணும் பண்றத கவனிச்சிருக்கீங்களா? ராத்திரியில ஊறவச்சு காலைல வெந்தய நீரைக் குடிக்கறதை... அதைத் திரும்ப பாட்டி வைத்தியம்னு நீங்க ஒதுக்கிடாதீங்க. நீங்களும் குடிங்க. வயித்தால போனா தயிர்சாதத்தில வெந்தயத்தைச் சேர்த்து லபக்குன்னு முழுங்குங்க. உபாதை சடன் பிரேக் போட்டுடும்!

— சுமி



கர்நாடகத்தில் மளமளவென்று தேர்தல் வேலைகளைத் துவங்கி விட்டார் தேவேகௌடா. ஒரே லட்சியம், தாம் மீண்டும் எப்படியாவது பிரதமராகிவிட வேண்டும் என்பது. அதற்கு ஒரே வழி, சென்ற முறை வெற்றி பெற்ற பதினாறு எம்.பி. சீட்டுகளை விட இந்த முறை அதிகம் பெற வேண்டும். இதில் மிகவும் தெளிவாக இருக்கிறார் கௌடா.

இந்தக் கனவு நனவாகுமா? தடையாக இருப்பவர் ஹெக்டே. சென்ற தேர்தலில் கௌடாவோடு கைகோத்துக் கொண்டு நின்ற ஹெக்டே இப்போது தனிக் கட்சியாக இருக்கிறார். ஹெக்டேவின் 'லோக் சக்தி' செல்வாக்கு மிகுந்த அரசியல்

# கணக்குப் போடும் கௌடா!

கட்சியாக இல்லாவிட்டாலும் ஜனதா தளத்தின் வெற்றி வாய்ப்புகளைப் பல இடங்களில் தடுமாறச் செய்கிற சக்தி அதற்கு நிச்சயம் உண்டு. எனவே, புதுப்புது வியூகங்களை வகுக்க நினைக்கிறார் கௌடா.

அதில் ஒன்று காங்கிரஸிலிருந்து பிரிந்து விட்ட பங்காரப்பாவுடன் கூட்டுச் சேர்ந்து கொள்வது! 'கர்நாடகத்துக்காரரான கௌடாவைப் பிரதமராகத் தொடர விடாமல் செய்த கட்சி காங்கிரஸ் என்பதால் அதன் மீது மக்களுக்கு இயல்பாகவே ஓர் அதிருப்தி வந்து விட்டது. எந்தவொரு கர்நாடகக் காங்கிரஸ் தலைவருக்கும் வோட்டுச் சேகரிக்கிற அளவுக்கெல்லாம் தனிப்பட்ட செல்வாக்கு இல்லை என்பது ஒருபுறம். முன்னாள் முதல்வர் வீரப்ப மொய்லிக்குக் கட்சிக்குள் ஏகப்பட்ட எதிர்ப்பு என்பதால் அவரும் அவரைச் சார்ந்தவர்களும் கட்சியில் ஆர்வம் காட்டாமல் ஒதுங்கியிருப்பது மறுபுறம்!

இந்த நிலையில்தான் பங்காரப்பா முக்கியத்துவம் பெறுகிறார். காங்கிரஸிலிருந்து அவர் பிரிவது இது ஆறாவது முறை என்றாலும் அவருக்கென்று கர்நாடகத்தில் ஒரு செல்வாக்கு இருக்கவே செய்கிறது. அதனால்தான் அவருடன் கூட்டு வைத்துக் கொள்வது லாபம்


• வீரப்ப மொய்லி


• பங்காரப்பா


• ஹெக்டே

தரும் என்று நினைக்கிறார் கௌடா! மறுபுறம் கூட்டுச் சேர்ந்து வெற்றி பெற்ற பிறகு பங்காரப் பாவும் பிரதமர் பதவிக்கே குறிவைத்தால் என்ன செய்வது என்கிற கலக்கமும் கௌடாவுக்கு இல்லாமல் இல்லை!

இந்த நிலையில்தான் அமோக அறுவடை தனக்கே என்கிற நம்பிக்கையில் களம் இறங்கியிருக்கிறது பி.ஜே.பி. தங்களால் மட்டுமே நிலையான அரசைத் தரமுடியும் என்கிற கோஷத்தோடு புறப்பட்டிருக்கிற பி.ஜே.பிக்கு மக்கள் என்ன பதில் சொல்லப் போகிறார்கள்?

ஒருபுறம் தேர்தல் விறுவிறுப்பு என்றால் மறுபுறம் தலைபோகிற பரபரப்பு கர்நாடகத்தில். பரபரப்புக்குக் காரணம் 'தரங்கா' என்கிற கன்னடப் பத்திரிகையில் வெளியான ஒரு கட்டுரை.

இந்தக் கட்டுரை வெளியானதாலேயே ஐந்து ரூபாய் விலையுள்ள அந்த பத்திரிகை நூறு ரூபாய்வரை விலை போனது! அப்படியும் கிடைக்காமல் போனதால் அந்த இதழை மறுபதிப்புச் செய்து வெளியிட்டதாகவும் ஒரு தகவல்!

அப்படி என்னதான் எழுதப் பட்டிருந்தது அக்கட்டுரையில்? 'பிரளயம்' என்கிற தலைப்பில் பதினெட்டுப் பக்கங்களுக்கு வெளியான அக்கட்டுரையில் 18.5.99ம் நாள் பூமி அழியப் போகிறது என்று உறுதியாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்த நாளில் சூரியன் அஸ்தமிக்காதாம். உலகின் இயக்கமே நின்று போய்ச் சூறாவளிக் காற்றுக் கிளம்பி வருமாம். சீதோஷ்ணம் ஜீரோ டிகிரிக்கும் கீழே போய்... பூமி குலுங்க, எரிமலைகள் வெடிக்க... அப்புறம் என்ன? அழிவுதான்!

ஆனாலும் பெங்களூர், மைசூர் மாதிரி கடல் மட்டத்திலிருந்து உயரமாக உள்ள சில நகரங்கள் மாத்திரம் தப்பிவிடும் என்று தமது கட்டுரையை முடித்திருக்கிறார் எம்.ஆர். நரேந்திரா என்பவர்.

இவர் எழுதியதை நம்பி மக்கள் அப்படிப் பரபரப்பாகப் படித்ததற்குக் காரணம், இவர் ஒரு பெரிய விஞ்ஞானியாகத்தானே இருக்க வேண்டும் என்கிறீர்களா? அதுதான் இல்லை. எம்.ஆர். நரேந்திரா ஒரு ஜோதிடர்!

பெங்களூரிலிருந்து : **அமுதவன்**

# பந்தயம்



நடக்கக் கற்று
நாலடி வைப்பதற்குள்
'ஓடு!' என்றார்கள்
ஓடலானேன் -
கைதட்டல்கள், வாழ்த்துக்
கூச்சல்கள்
வேகம், வேகம், இன்னும்
வேகம்
அன்னை மடியும்
காதல் ஒத்தடமும்
இளமைக் கூத்தும்
ஓட்டத்தினூடே
ஓடிமறைந்தன
ஓடும்போதேகல்யாணம் பண்ணி
கடமைகள் முடித்து
குழந்தைகள் பெற்று
குடும்பம் சுமந்து -
அடைந்தால் சிரித்து
இழந்தால் அழுது
பக்தியில் நனைந்து,
பயத்தில் உறைந்து
நரைக்க, நரைக்க,
நாட்கள் பறக்க
இரைக்க இரைக்க
ஓடிக்
கொண்டிருந்தேன்
ஒருநாள் எனக்கு
உண்மை புரிந்தது -
பந்தயம் என்றோ
முடிந்து போனது
நான் வெறும் -
பழக்க தோஷத்தில்
ஓடிக்
கொண்டிருக்கிறேன்!



— தஞ்சாவூர்க்
கவிராயர்

'தீர்த்த யாத்திரை போன ஆசார்யர் திரும்பி வரவில்லையே', என்று இன்னொரு சிஷ்யனாயிருந்தால் என்ன பண்ணியிருப்பான்?

'இன்னும் எத்தனை நாள் ஆகுமோ?' என்று ஒரு அண்டா ஜலத்தை எடுத்துக் கொண்டு வந்து அந்த அக்னி குண்டத்திலே சேர்த்துவிட்டு, 'அக்னிக்கு ஒரு நமஸ்காரம்' என்று புறப்பட்டுப் போயிருப்பான்! ஆனால் உபகோசலனோ, நாள் ஆக ஆக அக்னியிடத்திலே அதிமாகப் பற்று வைக்கலானான்.

அந்த அக்னியைப் பார்த்து ஸ்தோத்திரம் பண்ணினான். 'இந்த விச்வமெல்லாம் உன்னிடத்திலே அடக்கமல்லவா? ஹே அக்னே! என்னைப் பார்ப்பாயாக, எனக்கு அனுக்கிரஹம் பண்ணுவாயாக..' - இப்படியெல்லாம் அக்னியை ஸ்தோத்திரம் பண்ணினான். பன்னிரண்டு வருட காலம் முடிந்தபோது, அக்னி பகவான் அவன் முன் தோன்றி, அவனே அறியாத வகையில், பிரும்ம வித்யைக்கு அடிப்படையான வைச்வானர வித்தையை அவனுக்குப் புகட்டி, உபதேசம் செய்துவிட்டான். உபகோசலனுக்குத் தெரியாமலே எல்லா வித்யையும் அவனுக்கு வந்து விட்டது!

இது ஆன பிறகு, ஆசார்யர் போய் பன்னிரண்டாவது வருஷமும் முடிந்தது. ஆசார்யர் சத்யகாமன் வந்தார்!

வந்தால்... அக்னிக்கு எதிரிலே உபகோசலன் நின்று கொண்டிருக்கிறான். பார்த்தால், அவன் முகத்தில் பிரும்ம தேஜஸ் சொட்டுகிறது!

"ஏய்! உன் முகத்திலே பிரும்ம தேஜஸ் சொட்டுகிறதே! என்னை நீ ஆசார்யனாய் வரித்துவிட்டு, நான் வருவதற்குள் வேறொருவர் இடத்திலே நீ பிரும்ம வித்யை கற்றாய்! ஆகையால் என் எதிரிலே நிற்கறதுக்கு உனக்குத் தகுதியில்லை, போ!" என்றார்.

நடுங்கிப் போய்விட்டான், உபகோசலன்.

"சுவாமி! நான் எந்த அபசாரமும் பண்ணவில்லையே..."

"இப்போது நீ இங்கிருந்து போகிறாயா? இல்லை இழுத்துப் பிடித்துத் தள்ளட்டுமா?" கழுத்து கிட்டே கையைக் கொண்டு போனார்.

அதற்குள்ளாக அக்னி பகவான் பிரத்யக்ஷமாகி விட்டார். பிரத்யக்ஷமானவர், "நீர் வரிக்காத சிஷ்யனை நான் வரித்தேன். என்னை அவ்வளவு அழகாக அவன் உபாசனை பண்ணினான். அதனால் நானே அவனுக்கு உபதேசம் பண்ணிவிட்டேன்..." என்றார்.

நடுங்கிப் போய்விட்டார் ஆசார்யர் சத்யகாமர்.

"நானும் எத்தனையோ காலமாக அக்னிஹோத்திரம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். ஒரு நாள் கூட அக்னி எனக்குப் பிரத்யக்ஷமானதில்லையே! பன்னிரண்டு வருஷ காலத்தில் அக்னியை நேரே சாக்ஷாத் வரித்து விட்டாயே! நீயல்லவா உயர்ந்தவன்..." என்று சிஷ்யனை விழுந்து சேவிக்கிறார் சத்யகாமர்!

அக்னியே வந்து சொல்லிவிட்டுப் போனதாலே, இவ்வளவு தூரம், பன்னிரண்டு வருஷம் ராத்திரி பகல் பாராமல், ஒரே ரீதியிலே, மற்றதையெல்லாம் மறந்து, அக்னியை உபாசிக்கக்கூடிய இந்த வித்யைக்கு உபகோசல பிரும்ம வித்யை என்று பெயர் வந்தது.



இப்போது நாம் இந்த உபகோசலன் கதையைக் கேட்டோம். நம்மால் இந்த வித்யையைப் பண்ண முடியுமா? என்று யோசனை செய்ய வேண்டும்.

இரண்டு மணி நேரம் உபன்யாசம் செய்யவே, கேட்கவே நமக்கு சிரமப்

38

# ...ான்றுமில்லை..



படுகிறது. இதிலே எத்தனையோ விதமான நிர்ப்பந்தங்கள். மனத்திலே ஆயிரம் எண்ணங்கள் ஓடுகின்றன. இதற்குண்டான சரீர பலம் வேறு நமக்கு இருக்க வேண்டும்.

ஆகையினாலே, இப்படி இரண்டு மணி நேரத்துக்கே நாம் சிரமப்படுவதனாலே, பன்னிரண்டு வருஷ காலம் ஓர் ஏகாந்தமான இடத்திலே போய் உட்கார்ந்து கொண்டு இரண்டு வேளையும் அக்னியை உபாசனம் பண்ணுவதும், காப்பதும் நம்மால் முடியுமா..?

அதுவும் பக்தி சிரத்தையை நிர்ப்பந்தமாக வரவழைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதெல்லாம் உகந்ததில்லை. தேவதையை உள்ளன்போடு உபாசிக்க வேண்டும். அது எவ்வளவு கஷ்டம்!

அப்படிப்பட்ட வித்யையைப் போய் 'நான் பண்ணுகிறேன்' என்று ஆரம்பித்துவிட்டு, ஆறு மாத காலம் ஆனவுடனே, 'தெரியாத்தனமாக ஆரம்பித்து விட்டேன், வீணாகப் போய் விட்டதே. இந்த அக்னியை என்ன பண்ணுவது..?' என்று கேட்டுக் கொண்டிருக்கலாமா?!

இதைத்தான் பகவான் கீதையிலே சொல்கிறான். 'உன்னால் முடியாத காரியத்தில் போய் நீ இறங்காதே!'

'எடுத்துக் கொள்கிற காரியத்தை உன்னால் செய்து முடிக்க முடியுமா? அதை முதலிலே யோசனை பண்ண வேண்டும். முடியாத, வீணான காரியத்திலே போய் இறங்காதே!'

'தர்மத்தை விட்டு...' என்ற தொடருக்கு இது தான் அர்த்தம்.

வேதத்தில் எத்தனையோ சொல்லியிருக்கிறது. அத்தனையையும் நம்மால் பண்ண முடியுமா? என்று கேட்டால் அதற்கு ஓர் உதாரணம்! ஒரு ஏரி... மிகப் பெரிய ஏரி. மதுராந்தகம் ஏரி அளவுக்கு என்று வைத்துக் கொள்வோம். அதன் கரையிலே போய் ஒருத்தர் நிற்கிறார். ரொம்ப தாகம் எடுக்கிறது அவருக்கு. அந்த வேளையில் என்ன எண்ணம் ஏற்படுகிறது? ஏரி ஜலம் மொத்தத்தையும் பருகிவிட வேண்டும் என்று ஆசை! ஆனால் முடியுமா? தன் தாகத்துக்கு சாந்தி தரக்கூடிய அளவு ஜலம்தான் அதிலேயிருந்து அவர் எடுத்துக் கொள்ள

முக்கூர்
லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



"தலைவர் ஏன் கோபமா இருக்காரு?"

"ஒரு பதிப்பாளர் வந்து அவர்கிட்ட 'உங்க சுயசரிதையை கிரைம் நாவலா வெளியிட அனுமதி கொடுங்க'ன்னு கேட்டாராம்!"

— பா. ஜெயக்குமார்

லாம். அதுவே போதும்! ஏரி மொத்தத்தையும் பருக முடியவில்லையே என்பதற்காக தாகத்துக்கு வேண்டிய ஜலத்தையும் எடுத்துக் கொள்ளாமல் போவாரானால் அவருடைய அவிவேகத்தை என்னவென்று சொல்வது!

வேண்டிய ஜலத்தை எடுத்துக் கொண்டு வேண்டாத ஜலத்தை விட்டுவிடு என்றுதான் பகவான் சொல்கிறான்.

இதைத்தான் ஆண்டாளும் திருப்பாவையிலே 'மேலையார் செய்வினைகள் வேண்டுவன கேட்டியே' என்றாள். எத்தனையோ விஷயங்களைப் பெரியவர்கள் பண்ணுகிறார்கள். நம்மால் அத்தனையையும் பண்ணிவிட முடியுமா?

சுவாமி தேசிகனும் ரொம்ப அழகாக இதைச் சொல்கிறார்.

அகஸ்தியர் இருக்கிறாரே... அவர் சமுத்திர ஜலம் மொத்தத்தையும் 'அச்சுதாயனமஹ' என்று ஒரே விழுங்கில் ஆசமனியம் பண்ணிவிட்டாராம்! அனந்தாயனமஹ என்று சொல்லி அடுத்த ஆசமனியம் பண்ணுவதற்கு சமுத்திரத்திலே ஜலம் இல்லை!

ஆசமனத்துக்கென்று நியமங்கள் உண்டு. மூன்று தடவை பண்ண வேண்டும். 'அச்சுதாயனமஹ' என்று சொல்லும்போது 'தாகமாயிருக்கிறதே' என்று உறிஞ்சி உறிஞ்சி இரண்டு தம்ளர் தீர்த்தத்தைப் பருகிவிடலாமா...? அப்படிப் பண்ணக்கூடாது என்கிறது சாஸ்திரம்.

அதே போல், நுரையோடு இருக்கிற ஜலத்தில் ஆசமனம் பண்ணக்கூடாது.

தொண்டை கட்டியிருக்கிறது என்பதால், நல்ல இதமான வெந்நீர் வைத்துத்தரச் சொல்லி ஆசமனத்துக்குக் கேட்கலாமா? இல்லையெனில் ஆசமனத்துக்கான தீர்த்தத்தில் பரிமளமாக ஏலம், லவங்கம் இடித்துப் போட்டு ஆசமனம் செய்யலாமா...?

இது எதுவுமே கூடாது!

அதே போல், நின்று கொண்டே ஆசமனம் பண்ணக் கூடாது. தெற்கு திக்கை நோக்கி ஆசமனம் பண்ணக்கூடாது. அசுத்தமான இடத்திலே ஆசமனம் பண்ணக் கூடாது. இப்படியெல்லாம் ஆசமனத்துக்குப் பல நியமம். ஆசமனத்துக்கென்று கையில் எடுத்துக் கொள்கிற நீரின் அளவு எவ்வளவு இருக்க வேண்டும் என்றால், உளுந்து இருக்கிறது பாருங்கள்.. அந்த உளுந்தைப் போட்டால் அமிழக்கூடிய அளவுக்குத்தான் இருக்க வேண்டும்! அதுவும் நல்ல குளிர்ந்த தீர்த்தமாகத்தான் இருக்க வேண்டும். உட்கார்ந்தபடிதான் ஆசமனம் பண்ண வேண்டும்...

இந்த அகஸ்தியர் இருக்கிறாரே... அவருக்கு சமுத்திர ஜலம் முழுவதுமே உளுந்தமிழ்கிற தீர்த்தமாகப் போய்விட்டது என்றால் அவர் நிலையை என்னவென்று சொல்வது!

அகஸ்தியர் இப்படி சமுத்திரத்தை இழுத்து ஆசமனம் பண்ணுவதை மேகங்களெல்லாம் பார்த்ததாம். நாமும் சமுத்திர ஜலம் மொத்தத்தையும் பருக வேண்டும் என்று ஆசைப்பட்டு, வெள்ளையாயிருந்த, மேகமெல்லாம் நேரே சமுத்திரத்துக்கு மேலே வந்து சேர்ந்ததாம். அகஸ்தியர் பருகியதுபோல் பருக வேண்டும் என்று ஜலத்தை இழுத்தது மேகம். இழுத்து இழுத்துப் பார்த்துக் அலுப்பாகிவிட்டது!

காற்றடித்து, மேகத்தை நீள பூ... மண்டலத்துக்குத் தள்ளிக் கொண்டு வந்து விட்டது. மழையாக கொட்டித் தீர்த்தது! மறுபடியும் வெள்ளையாகி மேகம் நீரை மொண்டு வரப் போயிற்று! மறுபடியும் கொட்டியது. மறுபடியும் கிளம்பிப் போயிற்று!

ஒரு குருவி வந்து ஒரு நெல்லை எடுத்துக் கொண்டுபோன கதைதான்! ஒரு நாளாவது மேகத்தால் அகஸ்தியரைப் போல் முழுசாக சமுத்திரத்தை உறிஞ்ச முடியவில்லை! அகஸ்தியர் பண்ணினாரே என்று நாமும் பண்ண நினைத்தால் இப்படித்தான் ஆகும்!

ஆகையினாலேதான் 'மேலையார் செய்வினைகள் வேண்டுவன கேட்டியே' என்றாள் ஆண்டாள்.

பெரியோர்கள் பண்ணியது முழுக்க முழுக்க நம்மால் பண்ண முடியாது. ஆனால், நம்மால் என்ன பண்ண முடியுமோ அதைக் கட்டாயம் பண்ண வேண்டும். சரி, பண்ண முடியாததை விட்டுவிட்டு என்ன செய்யலாம்... வெறும் வாசல் திண்ணையிலே போய் உட்காருவதா...?

(தொடரும்)

# கரும்பு சுவைக்க சன்மானமும் உண்டு!




## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் மகத்தான முதலீட்டுத் திட்டம்!

**ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்.
5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)
பெற்றுக் கொள்ளுங்கள்.**

*அத்துடன்*

**● 4 இலக்கியப் பொக்கிஷங்களை அன்பளிப்பாகப் பெறுங்கள் ●**



1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.



ரூ. 10,000 [ரூ. பத்தாயிரம்] 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ-7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,
சென்னை - 600 102. தொலைபேசி எண் : 628 6869, 628 7879

---

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி.......................................................
   முகவரி : ..............................................................................
   ..............................................................................
   ..............................................................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் :.......................................................................
3. வாரிசுதாரர் : ....................................................................
4. கல்கி, அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி :..............................
..............................................................................
..............................................................................

CHEQUE/ D.D. No. DT. ON

---

இடம்..................................................... அன்புள்ள

தேதி..................................... முதலீட்டாளர் கையொப்பம்

பாரதிபாலன்

# வேடிக்கை மனிதர்கள்

வாசலில் கூச்சல். காதில் வந்து குத்துகின்ற கூச்சல். சர்மாஜியின் கவனம் நழுவிற்று. ரைட்டிங் பேடை சட்டென்று நகர்த்தினார். சர்மாஜிக்குக் கபகபவென்று கோபம். கண் சுருங்கி, மூக்கு மலர்ந்து விட்டது. பட்டென்று எழுந்து ஒருக்களித் திருந்த ஜன்னல் கதவை அகலத் திறந்தார். திறந்த மாத்திரத்தில் ஜில்லென்ற கடற்காற்று. சர்மாஜி ஒரு கணம் அதை அனுபவித்தார். சர்மாஜி மானிடவியல் துறைப் பேராசிரியர். நல்ல [illegible]காலவர் என்று பெயர். மனிதாபிமானம், மனித நேயம் பற்றியெல்லாம் வெளிநாடுகளுக் குப் ஃபாய் லெக்சர் கொடுத்துப் பிரபல மானவர்.

நான் ஐயா வீட்டில் வேலைக்காரன். கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர வேண்டும். காட்டிய திசையில் ஓட வேண்டும். மற்ற நேரமெனில் 'அந்த ஜன்னலைச் சாத்துடா சாம்பு' என்று சகித்துக் கொள்வார். இன்று முடியலை. நாளை டெல்லி போக வேண்டும். ஜவாஹர்லால் நேரு யுனிவர்சிடியில் ஒரு செமினார். பெரிய செமினார். உலகம் முழுவதிலிருந்து பெரிய பெரிய பிஸ்தாக்கள் எல்லாம் வருகிறார்களாம். 'இந்தியன் ஹ்யூமானிட்டிஸ் அண்ட் இட்ஸ் வால்யூஸ்' என்ற தலைப்பில் ஐயா கட்டுரை படிக்க வேண்டும். எனக்குப் படிப்பதில் ஆர்வம். நிறையப் படித்திருக்கிறேன். ஐயா இப்போதுதான் பேனாவைப் பிரித்தார். விடிய விடிய எழுதுவார். காலையில் டெல்லிக்குப் பறக்க வேண்டும். வெளியில் கூச்சல் ஓயவில்லை. படபடவென்று படியிறங்கினார்.

நானும் பின்னாடியே ஓடினேன்.

"வாட்ச்மேன்..."

"....."

"இதா வாட்ச்மேன்..."

"சார்...?"

"என்னது அங்க கூட்டம்?"

"ஒரு பொண்ணு, மயங்கி விழுந்துடுச்சு சார்!"

"எங்கே?"

"இதோ நம்ம பிளாட் வாசலண்ட."

"யாரது?"

"தெரியலை சார். அந்தண்டருந்து வந்துச்சாம். நான் அப்பத்தான் மோட்டார் போட்டுவிட்டு வந்துக்கினு இருந்தேன். அதுக்குள்ளர ஒரே பேஜாராயிட்டது!"

சர்மாஜி இரண்டடி தூரம் முன்னேறினார். நின்ற நிலையிலே தலையை மட்டும் உயர்த்திப் பார்த்தார். ஒரு சிறுமி. பத்துப் பன்னிரெண்டு வயதிருக்கும். நல்ல முக வெட்டு. பரட்டைத் தலை. பிளாட் வாசலில் விழுந்து கிடந்தாள். கால்கள் அகன்று தலை துவண்டு கிடந்தது. டக்கென்று பார்வையை என் பக்கம் திருப்பினார். ஒரே ஒரு நிமிஷம் மௌனம். இழுத்து ஒரு பெருமூச்சு விட்டார். 'நீ இங்கதான் வந்து விழணுமா?" என்ற பெருமூச்சு! "சாம்பு, பிளாட் செகரெட்டரி வீட்டுல இருக்காரானு பார்றா!" என்றார்.

அதற்குள் "அவர் வெளியிலே போயிட்டார்"- என்று ஒரு குரல். முதல் மாடியில் இருந்து வந்தது. சர்மாஜி தலையை உயர்த்திப் பார்த்தார். செகரெட்டரியின் மனைவி. சர்மாஜியின் முகம் சுளுக்கிற்று.

"இது என்னடா எழவு தொந்தரவு."

இடது வீட்டுக் கதவு திறந்தது. முழுவதும் திறக்கவில்லை. முக்கால் கதவு திறந்தது. எண்ணெய் காணாத கதவு சிணுங்கியது. ஆடிட்டர் ரத்தினசபாபதி



தலையை மட்டும் நீட்டினார். சர்மாஜியைப் பார்த்ததும் உதட்டோரம் சின்னதாக ஒரு சுழி ஓடிற்று. சட்டென்று உடம்பை உள்ளே இழுத்துக் கொண்டவர், அடுத்த கணம் சட்டையை மாட்டிக் கொண்டு வந்தார்.

"யெஸ்."

''ஒன் மினிட், இப்படி வாங்க..."

"வாட்?"

"ஒரு கேர்ள், வாசல்ல விழுந்து கிடக்கா. யார்னு தெரியலை. நம்ம செகரெட்டரியும் வெளியில போயிட்டார். ஒரே கூச்சல்."

ஆடிட்டர் சார் வாசலுக்கு வந்தார். இடுப்பில் கையூன்றி வேடிக்கை பார்த்தார். எதையோ சோதிக்கின்ற பார்வை. வாசலில் சிறு கூட்டம். மற்றபடி தெரு அமைதி. அது நீண்ட தெரு. கண் தொடுகிற தூரம் தாண்டி நீண்டு கிடந்தது. இடமும் வலமும் கட்டடங்கள். உயரமான கட்டடங்கள். அடுக்கு மாடிக் குடியிருப்புகள். தெரு துடைத்துப் போட்டது மாதிரி சுத்தம். இடது கோடியில் மட்டும் ஒரு கை ரிக்ஷா. ஒரு கிழட்டு ரிக்ஷாக்காரன். காலை அகட்டி ரிக்ஷாவில் மல்லாந்து படுத்துக் கிடந்தான். மற்றபடி மூன்று மணி வெயிலும் அமைதியும்தான்.

''இது நம்ம பிளாட்ல வேலை செய்ற பெண்ணா?''

''தெரியலியே...''

''வாட்ச்மேன், நம்ம பிளாட்லையா வேலை பண்றா?''

''இல்லை சார். இது வேற...''

''செகரெட்டரி இல்லையா?''

''இல்லை.''

''என் வீட்டுல டெலி∴போனே கிடையாது. ஆனா டெலி∴போன் பில் வந்திருக்கு?''

''போய்ச் சொன்னியா?''

''சொன்னேனே: முதல்ல பில் தொகையைக் கட்டிட்டு அப்புறம் ரீ∴பண்டுக்கு அப்ளை பண்ணுன்னு சொல்றாங்க!''

– என்.வி.ரமணி



''ட்ரஸரர் இருந்தாரே. இப்பத்தான் பார்த்தேன். வாட்ச்மேன், ரெண்டாம் நம்பர்ல சாரைக் கூப்பிடு.''

வாட்ச்மேன் கொஞ்சம் கிழம். விந்தி விந்தி நடப்பார். நானே ஓடினேன். காலிங் பெல்லில் கைவைத்ததுமே கதவு திறந்தது. டீ.வி. ஒலி கசிந்தது. ஒரு பெரியவர். அறுபது இருக்கும். ரிடையர் ஆனவர் போல இருந்தார். கொழு கொழுத்த பால் சதை. சிவப்பு பர்முடாஸும், ப்ளு-டி சர்ட்டும் போட்டு வயதை மூடி மறைத்திருந்தார்.

''யெஸ்''– அடித் தொண்டை உறுமிற்று.

''சார் கூப்பிட்டாங்க– இதோ நிக்கிறாங்க...'' வெடுக்கென்று அவர் பார்வை வாசலுக்குத் தாவிற்று. ஒரு நிமிடம் தயங்கினார். அவர் கால்கள் நடை வாசலில் கிடக்கும் ஸ்லிப்பரைத் துழாவிற்று. அதற்குள் சம்சாரம் வந்தது. ஏதோ தெலுங்கில் பேசியது. அவர் அதைச் சட்டை செய்யாது வாசலுக்கு வந்தார். அந்தம்மாள் தெலுங்கில் முனகிக் கொண்டே வாசல் பார்த்து நின்றது.

''வாங்க ஜி.கே.!''

''என்ன கூட்டம்?''

''பொண்ணு, யார்னு பாருங்க. நம்ம பிளாட்டுல வேலை பண்றாளா?''

''தெரியலையே...''

''ட்ரஸரர் ஆச்சே நீங்க?''

''நான் என்ன கண்டேன். மெயின்டனன்ஸ் சார்ஜ் கலெக்ட் பண்றதோடு சரி.''

''செகரெட்டரியைக் காணோம். அதுவரை காத்திருக்கவா முடியும்?''

''ஆக்ஸிடெண்டா...? இல்லை...''

''ஒண்ணும் தெரியலை. பெரிய தொந்தரவு.''

''ஒரே கூச்சல்! அதுகளைத் தொரத்தப் படாதா? வாட்ச்மேன் இங்க வாய் பாத்துண்டு நிக்காதே. ஓடு. அதுகளைக் தொரத்தியடி. இதுகளுக்கு எங்கனா ஒண்ணு நடந்திடப்படாது. எங்கே... எங்கேனு ஆளாப் பறந்திட்டிருக்குது... என்னத்தை உருப்படும் நாடு...''

''ஆமாம், ஒரே கூச்சல். நியூசென்ஸ்.''

''கூச்சலை விடுங்க. பிற்பாடு போலீஸ் வருவான். ஒவ்வொரு வீட்டுக் கதவா தட்டுவான். ஆயிரம் கேள்வி வரும். ஏன் எதுக்குன்னு தொளைச்செடுத்துப்பிடுவான். ஒரு தபா ஸ்டேஷன் வரை வந்திட்டுப் போகமுடியுமான்னு கேட்பான். அப்புறம் சாட்சி சடங்குனு ஒரே பேஜாரா யிடும். சிட்டியிலே எதை நம்ப முடியுறது...?''

''என்ன சார் பண்றது?''

''மயங்கிக் கிடக்காளா, இல்லை எதுனா அடிகிடி பட்டுடுத்தா?''

''மயக்கம்தான்.''

''தண்ணி கொண்டாரட்டுமா?''

''பொறுங்க. எதுக்கு வம்பு? செகரெட்டரி வரட்டும்.''

பிளாட் செகரெட்டரி அந்தச் சிறுமியிடம் சென்றார். காலை மடித்துக் குந்திட்டுஅமர்ந்தார். பிளாட் வாசிகள்

சுற்றிலும் வந்து நின்றார்கள். அவரவர் தகுதிக்கும், ஜாக்கிரதை உணர்விற்கும் ஏற்ப விலகியும் நெருங்கியும் வந்து நின்றார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் கரை கண்டவர்கள். அதனால் தான் அதிலேயே நீந்திக் கொண்டிருக்கின்றனர்.



''நர்ஸ்! டாக்டர் என் கட்டிலைச் சுற்றி சுற்றி ஓடி வர்றார்?''

''நான்தான் அப்பவே சொன்னேனே, டாக்டர் ரவுண்ட்ஸ் வரப் போறார்னு!''

— மதுரை என்.உஷாதேவி.

''இதா உன் பேரென்ன?''

''.....''

''பேரென்னங்கிறேன்லெ....''

''..................''

''எங்கனா வூட்டு வேலை செய்யுறியா?''

சிறுமி பேசவில்லை. செகரெட்டரிக்குப் பயம். என்ன இது என்ற பயம். சிறிது நேரத்தில் அந்தப் பயம் இதை எப்படித் துடைக்கப் போகிறோம் என்ற மலைப்பாக மாறிவிட்டது. ஓரக் கண்ணால் எல்லோரையும் ஒரு பார்வை. ''கேக்கிறேன்ல. பேசப் படாதா?'' ஆவேசம் வந்தாற் போல் ஒரு கூச்சல்.

சிறுமி பதறிற்று. மூச்சு இழுப்பு கூடிற்று. சுவாசம் திணறியது. நெஞ்சுக்கூடு ஏறி இறங்கியது. விழி பிதுங்கி உடம்பு துவண்டது. ஏதோ சிறல் சப்தம் மாதிரி ஒரு குரல்.

''ப்சு. என்ன பண்றது? கூட்டம் வேற. ஒரே நியூசென்ஸ்.''

''ஏழாம் நம்பர்ல பன்னீர் சார் இருப்பார். பன்னீர் செல்வம்னு பேர். எம்.எம்.டி.ஏ.லே இஞ்சினியர். அவரைக் கூப்பிட்டு வாங்க. ஏதுனா யோசனை கேக்கலாம்.''

வாட்ச்மேன் ஏழாம் நம்பர் வீட்டின் காலிங் பெல்லை அமுத்திவிட்டு, ஒரு அடி நகர்ந்து நின்று கொண்டான். முதலில் இடது பக்க ஜன்னல் திறந்தது. ஒரு சிறுமி எட்டிப் பார்த்தது. ஒரு கணம் அமைதி. திரும்பவும் ஒரு பெண் வந்தது. தொடர்ந்து நான்கைந்து நொண்டிக் கேள்விகள் கேட்டான். பிற்பாடு உள்ளே சென்று தன் கணவனை அழைத்து வந்தாள். பன்னீர்செல்வம் நின்ற நிலையிலே பார்வையை வாசலுக்கு ஓட்டினார். வீட்டிற்குள் சென்று சட்டையை மாட்டிக் கொண்டு வந்து படியிறங்கினார்.

''என்ன சார் இது! திரும்பவும் அடப்பா?''

''இது ட்ரெயினேஜ் ப்ராபளம் இல்லை. இது வேற சார்.''

சகலமும் அவருக்கு விளக்கப்பட்டது. இப்பாலும் அப்பாலும் தலையைத் திருப்பிப் பார்த்தார். கூட்டம் அவர் முகத்தையே பார்த்தது. சிறிது தூரம் நடை பயின்றார். தென்னங்கீற்றினை முறித்து ஒரு குச்சியைப் பிரித்தெடுத்தார். பல்குத்திக் கொண்டே பேசினார்.

''யூ நோ... லாஸ்ட் வீக் என் கோ-பிரதர் வீட்டிற்கு மாம்பலம் போயிருந்தேன். போஸ்டல் காலனில வீடு. இதே மாதிரிதான் ஒரு பொண்ணு. சுமாரான வயசு. வீட்டு வாசல்ல வந்து தொபுகடீர்னு விழுந்திட்டது. பிட்ஸ் வந்த மாதிரி உதறிட்டது. எல்லோரும் ஆடிப் போயிட்டாங்க. யார் என்னனே ஒண்ணும் தெரியலை. கடைசியில ஒரு ட்வண்டி ருபீஸ் கலெக்ட் பண்ணிக் கொடுத்தாங்க. சந்தோஷமா எழுந்து போயிட்டது. இதெல்லாம் ட்ராமா சார், பணத்துக்காக...''

''ஓ.கே. ஒரு ட்வண்ட்டி ருபீஸ் கலெக்ட் பண்ணிக் கொடுத்திடலாமா?''- ஒரு பர்முடாஸ் விடலை வியப்பாய்க் கேட்டது.

''இது அப்படித் தெரியலை சார்.''

''சார் நீங்க வேற, அப்படித்தான் சார்.''

''அப்ப பணம்தான் மோட்டிவா?''

''இதோ பொறுங்க'' என்று அந்தச் சிறுமியிடம் சென்றார். ''ஏய்... உய்...ஏய்...'' என்று மிரட்டி பாவ்லா காட்டினார். அது மலங்க மலங்க விழித்தது.

''போலீஸ்ல கம்ப்ளெய்ண்ட் பண்ணலாமா?''

''பண்ணலாம்.''

''வாங்க பன்னீர் சார். போயிட்டு வந்திடலாம்.''

''நான் எதுக்கு? செகரெட்டரி நீங்க போனாப் போறாதா?''

செகரெட்டரிக்குக் கையை அறுத்துக் கொண்ட மாதிரி சர்ரென்றது. சகல நேரமும் விழிப்பாய் இருக்கும் ஜனங்கள். ரத்தச் செல்களுக்குள் ஓடிய பாதுகாப்புணர்வில் உறைந்து போயிருந்தார்கள்.

''செகரெட்டரி தான் போலீஸுக்குப் போவணுமா? எனக்கு என்ன சம்பளமா

கொடுத்து வெச்சிருக்கீங்க. கௌரவ போஸ்ட் தானே?''

''சரி. பிளாட் அசோசியேஷன் சார்பில் ஒரு ரிப்போர்ட் கொடுத்திட்டாப் போச்சு. தனிப்பட்டு ஒருவர் பேரையும் இழுக்க வேண்டாம்.''

''அதானே! அப்படிப் பண்ணிட்டாப் போச்சு''- ஒரு குரல்.

''ஒரு கம்ப்ளெய்ண்ட் லெட்டர் ரெடி பண்ணிடலாமா?''

''பண்ணலாம்.''

''இது அடையாறு ஸ்டேஷன் கன்ட்ரோல்ல வருமா? இல்லை திருவான்மியூரா?''

''அடையாறுதான்.''

''நோ_நோ... திருவான்மியூர்.''

மொத்தக் கூட்டமும் சித்தமாயிற்று. போலீஸில் கம்ப்ளெய்ண்ட் கொடுப்பது தான் உத்தமம் என்று ஒரு கோஷ்டி நின்றது. வடமோ இடமோ போகட்டும் மேலே வந்து விழுந்து பிடுங்காமல் இருந்தால் சரி என்று ஒரு கோஷ்டி ஒதுங்கி நின்றது. கரகரவென்று காகிதமும் கையுமாக வந்து நின்று விட்டது. என்ன எழுதுவது, எப்படி எழுதுவது என்று கேள்வி வந்தது. ஒவ்வொரு தலையும் ஒவ்வொரு விதமாய்ப் பதில் சொன்னது. சர்மாஜிக்கு திடீரென்று மின்னல் சொடுக்கினாற் போல் ஒரு யோசனை. பனிரெண்டாம் நம்பரில் இன்கம்டாக்ஸ் ஆபீசர் ஒருவர் இருக்கிறார். பலரையும் பழக்கமுள்ளவர். அவரிடம் இந்தப் பிரச்னையை விட்டுவிடலாம். எவருடைய கையையும் கடித்து விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள் என்று அவர் காலடியில் வைத்து விட்டு ஒதுங்கிக் கொள்ளலாம். சர்மாஜியின் யோசனையை எல்லோரும் ஏற்றுக் கொண்டனர்.

சர்மாஜியுடன் நான்கைந்து பேர் மூன்றாவது மாடிக்குப் படியேறினார்கள். மூன்றாவது மாடியில் கிழக்குப் பார்த்த வீடுதான் இன்கம்டாக்ஸ் ஆபீசர் வீடு. சர்மாஜிதான் காலிங்பெல்லை அழுத்தினார். கதவு திறந்தது. பட்டைக்கரை வேஷ்டியும் தளர்ந்த ஜிப்பாவுமாய் ஒரு முரட்டு உடம்பு. கனிவான முகம்.

''வாங்க ப்ரொபஸர் சார்.''

''நமஸ்காரம்.''

''வாங்க.''

''ஒரு சின்ன அ[illegible]ஷன்.''

''வித் ப்ளஷர். உள்ளே வாங்கோ.''

ஓசை காட்டாது எல்லோரும் வீட்டிற்குள் சென்றனர். விரிந்த ஹால். தஞ்சாவூர் பெயின்டிங்ஸ் சுவரை அலங்கரித்தன. புத்தக ஷெல்ஃப் நிறைய [illegible]தடிப் புத்தகங்கள். அவரின் பேரனோ பேத்தியோ முதுகைக் காட்டிக் கொண்டு கம்ப்யூட்டரில் விளையாடிக் கொண்டிருந்தது.

''சொல்லுங்க சார்...''

''நம்ம பிளாட் வாசல்ல ஒரு பொண்ணு. சின்னப் பொண்ணு. யார்னு தெரியலை. விழுந்து கிடக்கு. ஒரே கூட்டமும் கூச்சலும். போலீஸ்ல கம்ப்ளெய்ண்ட் பண்ணலாம்னு யோசனை. போலீஸ் தொந்தரவாயிடக் கூடாதேன்னு பார்க்கிறோம்...''

''அவ்வளவு தானே?''

''நீங்க ஹெல்ப் பண்ணனும்.''

## காதைக் குளிர வைக்க ஒரு கடல்!

இசைப் பிரியர்களுக்கு சென்னை - அண்ணாசாலையிலுள்ள ஸ்பென்சர் ப்ளாசாவில் காத்திருக்கிறது, ஒரு கடல். பெயர்: மியூசிக் வோர்ல்ட். கஜல், பாப், ஜாஸ், 'என்றும் அலுக்காதவை', 'புதிதாக வந்தவை' என்றெல்லாம் பல்வேறு வகைகளில், கேசட், சிடி., சிடி-ராம் என்று பல்வேறு வடிவங்களில் 'வாங்கு வாங்கு' என்று நம்மிடம் கெஞ்சுகின்றன. விருப்பமானதைக் கேட்டுப் பார்த்தே வாங்கும் வசதி. ஆரம்பித்த ஒரு மாதத்திலேயே விற்பனை முப்பது லட்சத்தைத் தாண்டி விட்டதாம்! அங்கிருந்த விசிட்டர்கள் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தபோது, ''பி.பி.ஸ்ரீனிவாஸ், - பி.சுசீலா போன்ற அந்தக் கால பாடல் தொகுப்புகளையும் வாங்கி வையுங்களேன்!'' என்று எழுதியிருந்தார் ஒரு ரசிகர்.




- குல்லு

"பண்ணிட்டாப் போச்சு."

சோபாவில் கிடந்த கார்ட்லெஸ் போனை இடது கையால் எடுத்தார். முகத்துக்கு நேரே வைத்துக் கொண்டு 'டொக் டொக்..' என்று எண்களைத் தட்டி உயிருட்டினார். ட்க் கென்று காதுக்கருகில் வைத்துக் கொண்டு, எதிர் முனைப் பதிலுக் காகக் காத்திருந்தார்.

"கமிஷ்னர்கிட்டச் சொன்னா போறுமா?"

ஒருவரும் பதில் சொல்ல வில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பார் வையில் பெருமிதம்.

"இது அடையாறுல வருமா திருவான்மியூரா?"

"திருவான்மியூர் தான்."

"ஹலோ...கமிஷ்னர் சார் இருக்காங்களா? நான் எஸ்.ஆர். பேசுறேன். எஸ். ராமச்சந்திரன்னு சொல்லுங்க. இன்கம் டாக்ஸ் ஆபீசர். ஓகோ... அப்படியா.. சரி..சரி.. திரும்பவும் நானே காண்டாக்ட் பண்றேன்...தாங்க் யூ..."

"..........."

"அவர் சி.எம். வீட்டிற்குப் போயிருக்கா றாம்."

திரும்பவும் வேறு ஒரு நம்பரைத் தட்டி னார். "ஏ.சி.கிட்டப் பேசலாம். அஸிஸ் டெண்ட் கமிஷ்னர். நல்ல மனுஷன்... ஹலோ... ஏ.சி. சார் இருக்காங்களா... அப் படியா... எப்ப வருவாங்க.. சரி... தாங்க்யூ..."

எல்லோருடைய பார்வையும் அவர் முகத்தை மொய்த்தன.

"ஏ.சி. வெளியில போயிருக்கிறாராம். இன்னைக்கு ஸன்டே பாருங்க. எங்காவது அவுட்டிங் போயிருப்பாங்க."

"என்ன பண்ணலாம் சார்..."

"டோண்ட் ஒர்ரி. நான் பாத்துக்கிறேன். ஒன் அவர் கழிச்சு திரும்பவும் பேசலாம்."

"அப்ப போலீஸ் கம்ளெய்ண்ட் கொடுக்க வேண்டாமா?"

"கமிஷ்னர்கிட்டயே பேசலாம்."

"தாங்க் யூ சார். தாங்க் யூ வெரிமச்..."

கூட்டம் கை கூப்பிவிட்டு எழுந்தது. சர் மாஜி மட்டும் அவரின் கையைப் பிடித்துக் குலுக்கினார். கூட்டம் படபடவென்று படி யிறங்கிற்று. அலட்டலும் ஆரவாரமும் கூடிற்று. பேசிப் பேசி மெல்ல விஷயத்தை ஊதிவிட்டார்கள். செய்தி இழை இழையாய்ப் பிரிந்து நான்கு புறமும் பரவிற்று. மொத்த ஜனமும் வாசல் வந்து வேடிக்கை பார்த்தது. ஒரு சிறுமி இப்படிக் கிறுகிறுத்துப் போய் உட் கார்ந்திருக்கிறாளே! இது ஏன்! எதன் பொருட்டு இது நடந்தது. இது யார் வீட்டுப் பிள்ளை? எதற்காக இப்படி வந்து விழுந்து கிடக்கிறது. சாப் பிட்டதா. சாப் பிடவில்லையா? பசி மயக்கமா? இல்லை அடி பட்ட வேத னையா, என்ன இது? ஏன் இப் படி? பெற்றோர் கள் தேட மாட்டார்களா? எப்படி இதை வீட்டில் கொண்டு போய்ச் சேர்ப்பது? இந்தக் கேள்விகளெல்லாம் யார் மனதையும் துளைக்கவில்லை. என்ன செய்து, எப்படிச் செய்து இதைத் துடைக்கலாம் என்ற கவலை தான். நிறையப் படித்தவர்கள். எல்லாவற்றை யும் மூளையால் சிந்தித்தே பழகிவிட்டார்கள். இவர்களுக்கு மனசால் சிந்திக்கத் தெரி யாதோ? இதயத்தால் யோசிக்க முடியாதோ? மூளைதான். சகலத்திற்கும் மூளை தான். மூளையை மட்டும் கத்தி போல தீட்டி வைத்திருக்கிறார்கள்.

# இந்த ஆண்டின்

# சிறந்த புகைப்படம்!



பிரிட்டனைச் சேர்ந்த பீட்டர் பிளாக்வெல் என்கிற புகைப்படக் கலைஞர் எடுத்த இந்த புகைப்படம் 'இந்த ஆண்டின் மிகச் சிறந்த வன வாழ்க்கைப் புகைப்படமாக' தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறது.

– அ. குமார்

தெருவில் சலசலப்புக் கூடிற்று. போகிற வர்களும் வருகிறவர்களும் ஒரு கணம் நின்று

## பதற வைத்த பாராட்டு!



''திரைப்பட இயக்குநர் என்று அவரது பெயர் இருக்கும்; ஆனால் இயக்கியது பூராவும் அவருடைய அஸிஸ்டென்டாகவே இருக்கும். அந்த வகையில் வசந்தும் நீறுபூத்த நெருப்பாக இருக்கிறார்!'' என்கிற ரீதியில் ஒரு பொது நிகழ்ச்சியில் பேசப்பட பதறிப் போய்விட்டார் வசந்த்! ''அது உண்மையே இல்லை. இயக்கியது முற்றிலும் கே.பி. சார்தான். ஆபரேஷன் தியேட்டரில், ஸ்பெஷலிஸ்ட் ஆபரேஷன் செய்யும்போது அவருக்கு வேண்டிய கத்தி, கத்திரிக்கோல் என்று மருத்துவ மாணவர்கள் எடுத்துக் கொடுப்பதில்லையா? அதுபோல நானும் மாணவன், மாணவனே தான்'' என்று தெளிவாக்கினார்!'

– பி. சங்கர்

இருக்கும். ஏற்ற இறக்கமாகக் கட்டின வேஷ்டி. அழுக்கேறி நைந்து போன வேஷ்டி. முதுகு தெரியும்படியான சட்டை. புண் வைத்து, ஈ மொய்க்கும் யானைக் கால். நூலாம்படை பூத்தாற்போல் தலைமுடி. சதா மென்று குழறுகின்ற வாய். ரிக்ஷாவை நிறுத்திவிட்டு அந்தச் சிறுமியிடம் சென்றான். அவள் தோளைக் கனிவுடன் தொட்டான்.

"இன்னாமே?"

"..............."

"மேலக்குப்பமா? கீழக்குப்பமா?"

"..............."

''பயந்துகீனுச்சு சார். பாவம். இதா, இந்தன்டை இருக்கிற மேலக்குப்பமா இருக்கும். இல்லையுங்காட்டி கோவிலண்டை இருக்கிற கீழக்குப்பமா இருக்கும். வா...மே... வந்து ரிக்ஷாவுல குந்திக்க. நான் வழிச்சுக்கினு போய், விசாரிச்சு வூட்டுல வுட்டுட்டு வாரேன்...''

சிறுமியை மெல்லத் தூக்கி ரிக்ஷாவில் வைத்தான். சிறுமியின் முகத்தில் சின்னதாய் ஒரு பிரகாசம்.

வேடிக்கை பார்த்தார்கள். சிறுமி மிரள மிரளப் பார்த்துக் கொண்டிருந்தாள். விட்டு விட்டு அழுகை வேறு. இரைச்சல் கூடியது. தெரு முனையில் இருந்த ரிக்ஷாக்காரன் இதைப் பார்த்துக் கொண்டே இருந்தான். என்ன நினைத்தானோ தெரியவில்லை. தரதரவென்று ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு வந்தான். ரிக்ஷாக்காரனுக்கு அறுபது வயதிற்கு மேல் அழுக்கு வேட்டியைப் பிரித்தான். இடுப்பில் பாதிப் பன் ரொட்டியைச் சுருட்டி வைத்திருந்தான். "இந்தாமே தின்னு" என்று எடுத்து நீட்டினான். சிறுமியின் முகம் மலர்ந்தது. தத்தித்தத்தி ரிக்ஷா பெடல் போட்டு, ஏறினான்.

அவர்கள் இதையும் வேடிக்கை பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். ●

---



''நம்ம தலைவர் இப்படியா வெளிப்படையா பேசுறது?''

''என்ன விஷயம்?''

''கோவை கலவரத்தை ஒடுக்க ரவுடிகள் படையை கட்சி சார்பா அனுப்பத் தயார்னு பேசியிருக்காரே!''

– அம்பை தேவா



''இருந்தாலும் அந்தப் பத்திரிகை ஆசிரியருக்கு இவ்வளவு கிண்டல் புத்தி கூடாது..''

''ஏன், என்ன செய்தாரு?''

''ஜெயின் கமிஷன் அறிக்கையைப் பற்றி நம்ம தலைவர் அபிப்பிராய பேட்டி கொடுத்தார்ல, அதை முழுபக்க ஜோக்கா போட்டிருக்காரு!''

– சாரு

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசிதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசிதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசிதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசிதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

# 10

# நிலா வேட்டை

**பா. ராகவன்**

**மி**ருக வெறியுடன் ஸ்டீபன் மேல் பாய்ந்தபோது, இன்னது செய்யப் போகிறோம் என்று அவனே கூடத் தீர்மானித்திருக்கவில்லை. ஒரு கரம் சட்டையைப் பற்ற, இன்னொன்று கன்னத்தில் மோத, விழிகளில் குமுறிப் பொங்கிய ஆக்ரோஷம், சொற்களில் இறங்கிச் கட்டுத் தீர்த்தது.

நிகழ்ந்துவிட்ட அவலங்கள் அத்தனைக்கும் காரணம் அவன்தான். ஒரு வில்லன் போலக் கூட்டைக் கலைத்துவிட்டு, எதற்காக வந்திருக்கிறான்? ஸ்டீபன், உன்னை முற்றிலும் வெறுக்கிறேன். வெட்டுக் காயத்தில் பற்றிக் கொண்ட சீழ்போல் இம்சை தருகிறது உன் அண்மை.

"ஸாரி. நீ சொல்றது எதுவும் புரியலை. நான் வந்த விஷயம் வேறு" என்று ஸ்டீபன் சொன்னான்.

"சரி, சொல்லித் தொலை" என்றான் வெறுப்புத் தாண்டவமாட.

"பத்திரிகையிலே செய்தி பார்த்தேன். இதெல்லாம் என்ன ஹரி?"

"எதெல்லாம்?"

"புரியாத மாதிரி கேட்காதே! சொல். உனக்கு என்ன பிரச்னை?"

அவன் ஒரு கணம் கூடத் தயங்கவில்லை. "நீதான்!" என்றான் மிக உரக்க.

ஸ்டீபன் அவனை உற்றுப் பார்த்தான். இடி விழுந்த கன்னத்தின்மேல் இன்னும் விரல்களை வைத்துக் கொண்டு இருந்தான். ஒளியற்ற, கவலை முகத்தில் கலவரம் சேர்ந்து இருந்தது.

"எனக்குப் புரியலை."

"புரியலை? என் பெண்டாட்டி சொல்லலை? ஆல் இந்தியா ரேடியோவின் அபிராமபுரம் வானொலி நிலையம். அடுத்த நிமிஷம் போன் பண்ணி இருப்பாளே? நான் கூட இல்லை. நேராவே வந்து இருப்பாளே? பத்து நாள்! உல்லாசம் கொப்பளிச்சு இருக்குமே? இன்னொரு தடவை பெங்களூர், கூடவே மைசூர், கோவான்னு சுத்திட்டு வரவேண்டியது தானே? நாகர்கோவிலுக்குத் தற்செயலாய்ப் போனானாம். அங்கே போன் மேல் போன் போட்டு, அடுத்தவன் பெண்டாட்டிக்கு நாயலை அலைஞ்சிருக்கே! வெட்கமா இல்லை? அத்தனை கேட்குதாடா உனக்கு? நான் எரிஞ்சு எரிஞ்சு சாம்பலாறேனே, தெரி





யலை? என் கண்ணைப் பார்! இனி அழறதுக்குத் தண்ணி இல்லை!"

ஸ்டீபனின் காலுக்குக் கீழே பூமி நழுவிக் கொண்டிருந்தது. தண்ணீர், தண்ணீர் வேண்டும் எனக்கு. யாராவது தர முடியுமா?

நிகழ்ந்து விட்ட சம்பவங்களால் கலைந்து இருந்த ரங்கா, சட்டென்று பிரக்ஞையைப் பற்றிக் கொண்டு, எழுந்து போய், தம்ளரில் தண்ணீர் பிடித்துக் கொண்டு வந்து ஸ்டீபனிடம் கொடுத்தான். அவன், அதை வாங்கின வேகத்தில் விழுங்கி விட்டு, "நான் வரேன்" என்று சட்டென்று வெளியேறி, காணாமல் போனான்.

"ஏன் இப்படிப் பண்ணிட்டே ஹரி?" என்றான் ரங்கா.

"வேறு என்ன பண்ணச் சொல்றே? போதும் ரங்கா. என்னென்ன பார்த்துட்டேன்? எல்லாமே போதும். இதுக்கெல்லாம் சீக்கிரம் ஒரு முடிவு வரணும்னுதான் தவிக்கிறேன். என் எல்லா நடவடிக்கைகளின் நோக்கமும் அதுதான்!"

ஆனால், தன் நடவடிக்கைகளுக்கு நோக்கம் கூட வேண்டாம்; ஏதும் அர்த்தமாவது இருக்கிறதா என்று அவன் தனக்குள்ளே கேட்டுக் கொண்டான். இல்லை என்று தோன்றியது. எல்லா சிக்கல்களும் தன்னால் தான் என்று ஓயாமல் ஒலிக்கிற உள்குரலை ஒளித்து வைக்க முடியாமல், தானே காட்டிக் கொடுத்துவிடப் போகிறோமோ என்று தவித்தான். தவித்துக் கொண்டாவது எதற்காக இதையெல்லாம் சுமக்க வேண்டும்? ஹிப்பாக்ரஸி? இல்லை, இல்லை என்று கதறத் தோன்றியது. என் தவிப்பு நிஜம். அதன் தகிப்பு நிச்சயம். என் அல்லல்கள் பிரத்யட்சம். எதுவுமே வேஷமில்லை. கண்ணை இறுக்கி மூடி, தலையை உதறினான்.

"விடு ரங்கா. நாம் கிளம்பலாமா? டிஸ்ட்ரிப்யூட்டர்கள் ஷோ இருக்கு."

"பத்து நிமிஷம்" என்று அவசரமாக பாத்ரூமுக்குள் நுழைந்தான் ரங்கா.

போன் அடித்தது. ஹரி எடுத்தபோது, எதிர்முனையில் அவன் எதிர்பாராத ஆச்சர்யம்,

அவனை அழைத்தது.

ஹரி, ஹரி இருக்கிறாரா? ஓ, நீங்களேதானா? என் அதிர்ஷ்டம். சென்ஸார் போர்டு அனந்த நாராயணன் சொன்னார், அத்தனை அற்புதமாகச் செய்து இருக்கிறீர்களாமே இந்தப் படத்தை? மறுக்கக் கூடாது. அடுத்தபடம் எனக்குச் செய்துதர வேணும். சரியா? சந்தோஷம். வெள்ளிக்கிழமை நல்ல நாள். அன்று அட்வான்ஸுடன் நேரில் வருகிறேன். என்னது? படமும் அன்றுதான் ரிலீஸா? எத்தனை பொருத்தம் பாருங்கள்.

வாழ்க்கை, விசித்திரங்கள் நிறைந்தது. ஜன்னல்கள் மூடப்படுகிறபோது, கதவுகள் காற்றில் திறந்து கொள்கின்றன. கதவுகளும் மூடப்படும்போது கூரை திறந்து கொள்கிறது. பூமி பிளக்கிறபோது, தோள் கொடுத்துத் தாங்குகிற விதமாக இதோ ஓர் அழைப்பு. கடவுள் இன்னும் கொஞ்சம் கருணையை மிச்சம் வைத்திருக்கிறார்.

சினிமா, தந்திரமயமானது. சினிமாக்காரர்களும் தந்திரம் மிக்கவர்கள்தாம். சென்ஸார் தெய்வங்களின் வாயிலிருந்து பாராட்டாக ஒரு சொல் உதிர்வது எத்தனை விசேஷம் என்று அவர்களுக்குத் தெரியும். ஒருவேளை இந்தப் படம் வெற்றி கண்டு விட்டால், யாரும் மொய்ப்பதற்குள், முந்திக் கொண்டு விட்ட ப்ரொட்யூசரை, அவன் வெகுவாகக் கேள்விப் பட்டிருக்கிறான். திட்டமிட்டுக் காரியம் செய்வதில் விற்பன்னர். எடுத்த எந்த ஒரு படமும் இதுகாறும் கையைச் சுட்டதில்லை. அவரது கணக்குகள் பொய்த்தது இல்லை. கடவுளுக்கு நன்றி.

குளித்துவிட்டு வந்த ரங்காவிடம் சொன்னபோது, அப்படியே இறுக்கிக் கட்டிக் கொண்டான்.

"இதை இன்னொரு ஆரம்பம்னு நினைச்சுக்கோ ஹரி. ஃபர்ஸ்ட், கோ அண்ட் ஷேர் திஸ் வித் யுவர் வைஃப். ஒரு சந்தோஷம், நூறு கஷ்டங்களை மறைச்சுடும். தெரியும், இல்லையா?"

கடவுளே, கேட்பதற்கு எத்தனை சுகமாக இருக்கிறது! எத்தனை உண்மையும் கூட?

வெளியாகவிருக்கிற படத்துக்கான வாய்ப்பு வந்த தினம் அவனுக்கு ஞாபகம் வந்தது.

முந்தைய படம் அபாரமான தோல்வியைக் கண்டு, அவன் துவண்டிருந்த சமயம். ப்ரொட்யூசர் கூப்பிட்டு அனுப்பியபோது, ஏதாவது சிறு உதவி வேண்டிய அழைப்பாக இருக்கும் என்றுதான் நினைத்தான்.

"டைரக்டரே! மனசு முழுக்க துக்கமும் கவலையுமா அழுத்துதா? எனக்கும் அப்படித்தான். மூணு படம் வரிசையா முடங்கிடுச்சு. கிட்டத்தட்ட மஞ்சக்கடுதாசி குடுக்கற நிலைக்கு வந்து இருக்கேன். தோத்தவனோட வலி, இன்னொரு தோத்தவனுக்குத்தான் தெரியும்னு நம்பி, உங்களைக் கூப்பிட்டேன். கடைசியா ஒரு முயற்சி பண்ணலாம்னு இருக்கேன். உங்க திறமையில் நம்பிக்கை வெச்சுக் கேக்கறேன். எனக்கொரு படம் செஞ்சு குடுங்க. இது அட்வான்ஸ்..."

அது அதிகமில்லை. வெறும் அஞ்சாயிரம்.

# காண்டா மிருக வண்டு!

படத்தைப் பார்த்தால் காண்டா மிருகத்தின் சாயல் தெரிகிறதா? தென்னை மரங்களைத் தாக்கும் இந்தக் கறுப்பு கூன் வண்டுகளுக்கு காண்டாமிருக வண்டு என்று பெயர்.

தென்னை மட்டுமின்றி தென்னை குடும்பத்து மரங்கள் அனைத்திலும் குருத்துப் பகுதியில் ஒரு விரல் நுழையக்கூடிய சிறிய துவாரமிட்டு, கீழ் நோக்கி உட்பகுதிவரை சென்று சுவையான குருத்துப் பகுதியைத் தின்று வாழுகிறது. பதினைந்து நாட்களில் ஒரு தென்னை மரத்தில் குருத்தைச் சாகடித்து விடுகிறது. பூம்பாளையை ஓட்டை இட்டு உட்பகுதியில் உள்ள பூக்களைத் தின்று விடுவதால் தேங்காய் மகசூல் பாதிக்கிறது.



இது ஒரு சமயத்தில் சுமார் 150 முட்டைகள் இடுவதால் விவசாயிகளுக்குப் பெரும் நஷ்டத்தை உண்டாக்குகிறது. தாக்குதல் வருமுன் தடுக்க, திருவையாறில் அமைந்துள்ள தென்னை ஆராய்ச்சி மையம் வழி கண்டிருக்கிறது. 'விளஸ்' மிக்ஸ் பவுடர் 10 கிராம்-ஐ 200 மில்லி தண்ணீரில் கரைத்து குருத்துப் பகுதி நனையும்படி ஊற்றினால் வண்டுகள் வெளியேறிவிடும். மறுபடி தாக்குவதில்லை.

— டாக்டர் வா.செ. செல்வம்



"அவனுக்குக் கீழே இரண்டாயிரம் பேர் வேலை செய்யறாங்கன்னு சொன்னதைக் கேட்டு என் பொண்ணை அந்தப் பையனுக்குக் கட்டி வெச்சது தப்பாப் போச்சு..."

"ஏன் என்ன ஆச்சு?"

"ஆபீஸ்லே நான்காவது ஃப்ளோரில் ப்யூனா இருக்கான்!"

— வெ. ராஜாராமன்

ஆனால் எத்தனை லட்சங்களும் அதற்கு ஈடாகாது என்று அவன் நினைத்தான். தடுக்கி விழுகிறபோதெல்லாம் யாராவது தாங்கிக் கொள்கிறார்கள். அன்று அவனுக்குத் திருமண நாள். கொண்டாடும் மனநிலை இல்லாமல் துவண்டு இருந்தவன், பீறிட்ட புத்துணர்ச்சியில் நேரே ஜி.ஆர்டி. போனான். ரஞ்சனியின் பனி விரலுக்குப் பாங்காக ஒரு மோதிரம். நுகர்ந்து கிறங்க ஒரு பந்து மல்லிகை. கூடுதலாக ஒரு ஸ்வீட் பாக்கெட்.

**வீ**ட்டுக்கு வந்தபோது, ரஞ்சனி வரைந்து கொண்டு இருந்தாள். சப்தமில்லாமல் பின்புறம் சென்று கண்ணைப் பொத்துதல். லாகவமாகத் திருப்பி, இதழோடு ஒரு முரட்டு மோதல். இடுப்பில் சில்மிஷம். இறுக்கத்தில் ஓர் இலக்கியம். நெஞ்சில் சாய்த்துக் கூந்தலில் ஒரு, விரல் நீச்சல்.

"விடிஞ்சதுலேருந்து ஒண்ணும் சரியில்லை. இப்போத்தான் ஐயா மூடுக்கு வந்திருக்காராக்கும்?"

"உம்!"

"என்ன திடீர்னு?"

"இன்னிக்குக் கல்யாண நாள்."

"தாங்க் காட்! உங்களுக்கு மறக்கலை!"

"மறக்குமா ரஞ்சனி?"

"பின்னே, காலையிலேருந்து என்ன உம்மணா மூஞ்சி?"

"மனசு சரியில்லை. தெரியாதா உனக்கு?"

"இப்போ சரியாயிடுச்சாக்கும்?"

"உம்."

"எப்படி?"

"அடுத்தப் படம் கிடைச்சாச்சு."

"ரியலி?"

ஒரு வேகத்தில் அவனை சோபாவில் தள்ளி, மேலே பாய்ந்து மூடிக்கொண்டாள். மோதும் சாரல். மோகத் தீச்சுடர். கதனகுதூகலத்தில் ரகுவம்ஸ ஸுதா. வீணையின் மீட்டல். விரல்களின் நர்த்தனம். காதிலே ஒலிக்கும் கானப் பேய்மழை. ராக்கெட். ஐஸ் க்ரீம். ரஞ்சனி. ரஞ்சனி. ரஞ்சனி.

ஆளை அழுத்தும் பெருமூச்சின் முடிவில் நினைவுகளிலிருந்து மீண்டான்.

"கிளம்பலாமா?"

"நான் சொன்னது?"

"போறேன் ரங்கா. சாயங்காலம் வீட்டுக்குப் போறேன். அதையும் பார்த்துடலாமே? ஆனால், எனக்கு நம்பிக்கை இல்லை."

நம்பிக்கை இல்லாவிட்டாலும் நப்பாசை இருப்பது, அவனுக்கே தெரிந்து இருந்தது. மறுபடியும் ஒரு வாழ்க்கை! எல்லாவற்றிலிருந்தும் மீண்டு அல்லது எல்லாவற்றையும் மறந்து. கடவுளே, அது சாத்தியம்தானா?

மன ஓரத்தில் மிக லேசாக முளைவிட்ட நம்பிக்கை, ஷோ முடிந்ததும் லேசாக வாடத் தொடங்கியது. லட்சங்களில் வியாபாரம் பேசுகிற விநியோகஸ்தர்களுக்குப் படம் அத்தனை திருப்தி தரவில்லை என்பது விமர்சனங்களில் தெரிந்தது.

"நல்லாத்தான்யா பண்ணி இருக்கே. ஆனா பெப்பு போறலை!"

"அந்தப் பொண்ணுதான் எதுக்கும் துணிஞ்சவளாச்சே, கொஞ்சம் தாராளமா யூஸ் பண்ணி இருக்கலாமில்லை?"

"பி அண் ஸி காரனுக்கு கிளைமாக்ஸ் புரியாதுய்யா. முடிஞ்சா மாத்திரு."

"ஃபைட்டே இல்லியேய்யா. விழுப்புரத்துக்கு அப்பால இருக்கறவனை எப்படி உட்கார வைக்கிறது?"

கொஞ்சம் வயிற்றைக் கலக்கினாலும் ப்ரொட்யூசர் தெம்பாகவே இருந்தார். இதற்கு மேல் இறைவன் சோதிக்கமாட்டான் என்கிற அழுத்தமான நம்பிக்கையும் வாங்கிவிட்ட அட்வான்ஸுக்குக் குந்தகம் வராது என்கிற லாஜிக்கும் தந்த தெம்பு.

ஹரி மட்டும் கொஞ்சம் ஆடிப் போய் இருந்தான். விடாமல் துரத்துகிற விதி பற்றிய அச்சம். விமர்சிக்கிற நோக்கில் மேலும் யாராவது எதிரே வந்தாலே உடல் பதறியது. இதையெல்லாம் கண்டு கொள்ளாதே என்று ரங்கா அடிக்கடி, கண்ணால் தைரியம் ஊட்டிக் கொண்டிருந்தாலும் மனம் அடங்க மறுத்தது. ஒரு துணை. அழுத்தமாகக் கரங்களைப் பற்றித் தோளை அணைக்கிற ஒரு கவசம் வேண்டி இருந்தது. ரஞ்சனி! எத்தனைப் பரிவும் கனிவுமாக எப்போதும் பூத்து இருப்பாள்! எப்படி மாறிப் போனாள்? காதல் என்ன கைப் பொருளா? நினைத்த நேரத்தில், நினைத்த இடத்தில் மாற்றி வைக்க? ஒரு வார்த்தை. 'அதெல்லாம் இல்லை. உங்கள் சந்தேகம் தவறு' என்று ஏன் சொல்லவில்லை? கடவுளே, அந்த



''மாமூல் வாங்கிறதைக் கிண்டல் பண்ணி ஜோக் எழுதுறது நான்தான்னு அந்த கான்ஸ்டபிளுக்குத் தெரிஞ்சு போச்சு...''
''அடடா! ரொம்ப கோபப்பட்டிருப்பாரே...?''
''ஊஹூம்... வர்ற சன்மானத்துல அவரும் 'பங்கு' கேக்கிறாரு!''
— பா. பர்வதா

போட்டோ!

நினைக்க, நினைக்கக் குமுறிக் கொண்டு வந்தது அவனுக்கு.

இன்று தீர்த்து விட வேண்டும். எது ஒன்றையும் மூடி வைக்காமல், உடைத்துப் பேசிவிடச் செய்ய வேண்டும். வீராப்பாகக் கிளம்பிப் போனவன், மறுபடி திரும்பி வந்தது பற்றிக் கிண்டலாக நினைப்பாளோ?

ஆனாலும் பரவாயில்லை என்று தோன்றியது. விளிம்புகளில் தொற்றிக் கொண்டு ஊசலாடுவதைக் காட்டிலும் விழுந்து இறப்பது மேல்.

அவரவர் கைகுலுக்கி, தோளைத் தட்டிவிட்டு, தாஜிலிருந்து வந்த பிற்பகல் உணவை ஒரு கைபார்த்து, அன்பளிப்புகளோடு காரிலும் தேரிலும் ஏறிப் போன பிறகு, ஹரி, ப்ரொட்யூசரிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

''வரேன், ரங்கா'' என்று அவனிடம் சொன்னபோது, கையைப் பற்றி அழுத்தினான்.

"ஒப்பனா இரு ஹரி. மனசை மூடிக்காதே. வேணா பாரு. எவ்ரிதிங் வில் பி ஆல்ரைட் டுடே!"

ஒரு புன்னகையை அவனிடம் கொடுத்துவிட்டு, காரைக் கிளப்பி, வேகப் பாய்ச்சலில் வீட்டைத் தொட்டான்.

பூட்டி இருந்தது. செம்பருத்திச் செடியில் பூத்து, உதிர்ந்திருந்தவற்றைக் கவனித்தான். மூன்று நாட்களாகவா? எங்கே போனாள்?

அக்கம்பக்கத்தில் பதில் இல்லை. மாற்றுச் சாவியில் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் குப்பென்று இருள் வாசனை. விட்டுப் போன தினத்துக் காலையில், முதலில் உணர்ந்த அதே வாசனை.

படுக்கை அறை. சமையல் அறை. மாடி. தோட்டம். பாத்ரூம். வாசல், வராண்டா. எங்கும் எதுவும் வினோதமாக இல்லை. அது அது. அப்படி அப்படியே. நேர்த்தி பிசகாத ரஞ்சனியின் நிர்மாணம். ஆனால், அவள் எங்கே போனாள்?

சட்டென்று ஸ்டீபனுக்கு போன் பண்ணலாம் என்று நினைத்து டெலிபோனை எடுத்ததும் காலை நடந்தது ஞாபகம் வந்து, சோர்ந்து போய் வைத்தான். என் யூகங்கள் எல்லாமே தவறாக இருந்துவிட்டால் எத்தனை கேவலமாக நினைத்து இருப்பான்? என்னைப் பற்றிய நினைவே குமட்டிக் கொண்டு வருமே?

ரஞ்சனியின் சிநேகிதங்கள். அவளுக்குத் தெரிந்தவர்கள். அவளைத் தெரிந்தவர்கள். திருமணத்துக்கு முன் அவள் தங்கி இருந்த பெண்கள் விடுதி. லலித் கலா அகதமி. ஜெர்மன் கல்சுரல் சென்டர். அவள் போகக் கூடிய பிற இடங்கள். சொந்தம் என்று சொல்லிக் கொள்ள ஒரே ஒரு மாமா இருக்கிறார்; கடைசி மூச்சை இழுத்துக் கொண்டு. திருவல்லிக்கேணியில் அவர் வீடு.

தொலைபேசித் தொடர்புகளால் உபயோகம் இருக்கவில்லை. கடவுளே, என்ன ஆனாள் ரஞ்சனி? வேறு வழியில்லை. கதவைப் பூட்டிக் கொண்டு அவன் ஸ்டீபன் வீட்டுக்குப் புறப்பட்டான்.

மனத்தில் விபரீதம் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. என்னவோ நேரப் போகிறது. என் குழப்பங்கள் முற்றுப் பெறும் விதமாக. தவிப்புகள் தணியும் விதமாக. ஆனால் விபரீதமாக ஏதோ ஒன்று. ஆயுளுக்கும் மறக்க இயலாதபடி. என்ன அது?

சொல்லி வைத்தாற்போல் செல்லுலர் ஒலித்தது. ரங்கா.

"ஹரி, எங்கே இருக்கே? நேரே சென்ட்ரல் போ. ஆட்டோவில் ஸ்டீபனும் ரஞ்சனியும் போறதைப் பார்த்தேன். சூட்கேஸ் எல்லாம் வெச்சு இருந்தது. என்னன்னு தெரியலை. நான் இப்போ கார்ப்பரேஷன் பக்கத்துலேருந்து பேசறேன். உடனே வா. நான் அவங்களை ஃபாலோ பண்றேன்."

பதறி அடித்து, ஆக்ரோஷமாக காரை வளைத்துச் சீறி, மவுண்ட் ரோடைத் தொட எஸ்.ஐ.ஈ.டி. சிக்னலைக் கடந்தபோது, அவன் விளக்கைக் கவனிக்கவில்லை. விநாடியில் கார் நசுங்கி, கண்ணாடி சிதறி, அவன் மார்பு ஸ்டியரிங்கில் மோதிக் கிழித்துத் தூக்கி எறியப்பட்டபோது, மோதிக் கவிழ்த்த அலுப்புத்தீர பிளாட்பாரம் வரை ஓடி, மூச்சிரைத்து நின்றது மாநகரப் பேருந்து.

நிறையப் பேர் உச்சுக் கொட்டுவது ஏககாலத்தில் அவனுக்கு உக்கிரமாகக் கேட்டுக் கேட்டுக் கேட்டு மெல்லத் தேய்ந்து, அப்படியே நின்று போனது.

(தொடரும்)

● எஸ். திருமலை, மதுரை – 7.

? த.மா.கா. – தி.மு.க. கூட்டணி தொடர வேண்டும் என்று எழுதியிருக்கிறீர்கள். நடைபெற இருப்பது நாடாளுமன்றத் தேர்தல்; சட்டமன்றத் தேர்தல் அல்ல... இவர்கள் இரண்டு பேரும் கூட்டுச் சேர்ந்து மைய அரசையா பிடிக்கப் போகிறார்கள்...?

! விஷயம் அவ்வளவு சுலபமானதல்ல மிஸ்டர் திருமலை... த.மா.கா. – தி.மு.க. கூட்டணி உடைந்தால், மைனாரிடி வாக்குகளிலேயே அதிக எம்.பிக்களை நாடாளுமன்றத்துக்கு அனுப்பும் வாய்ப்பு 'ஜெ'வுக்கு அதிகரிக்கும். அப்போது தி.மு.க. அரசு தமிழகத்தில் மக்கள் ஆதரவை இழந்துவிட்டதாகப் புரளி பண்ணி, ஆட்சியை டிஸ்மிஸ் செய்யக் கோரிக்கை பிறக்கும். மாநில சட்டமன்றத் தேர்தல் நடத்துமாறு ஆர்ப்பாட்டம் செய்வார்கள்... தேவையா இதெல்லாம்...?

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

? கமலின் ரசிகர்கள் கமலை 'மகாத்மா' என்றழைத்து, போஸ்டர் ஒட்டியிருக்கிறார்கள். அறிவுஜீவியான கமல், இதையெல்லாம் கண்டிக்காமல் மௌனம் சாதிப்பதேன்...?

! இதெல்லாம் தவறு என்று புரிந்து கொள்வதற்கு அறிவுஜீவியாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. சராசரி மனிதனுக்குக் கூடத் தெரியும். கமல் கண்டிப்பாகக்

# காங்கிரஸை


• மூக்கு போச்!

கண்டிக்கத்தான் வேண்டும்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? சாத்தூரார் தி.மு.க.வில் சேருகிறாராமே...?

! சேர்ந்தே விட்டார்! வைகோவுக்கு எதிராக நிறுத்தப்படுவார் என்றும் பேச்சு... சபாஷ்!


• தகவல் களஞ்சியம்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? ஒரு கலைஞனுக்கு எப்போது பொன்னாடை போர்த்திப் பாராட்ட வேண்டும் சார்...?

! கலைஞர்களுக்குத்தான் பொன்னாடையும் பாராட்டும் நிறையவே வாய்க்கின்றனவே! கலைஞர்கள் பற்றிய தகவல்களைக் களஞ்சியம் போல் சேகரித்துத் தந்து வருகிற ஒருவருக்குச் சமீபத்தில் உயர்ந்த கௌரவம் செய்யப்பட்டிருக்கிறது. அமெரிக்க வரலாற்றுக் கழகத்தினர் அளிக்கும் 'இந்த வருடத்துச் சிறந்த மனிதர் விருது' பெற்றிருக்கிறார் ஃபிலிம் நியூஸ் ஆனந்தன். பாராட்டுவோம். வாழ்த்துவோம்!


• பூஜ்யம்!

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? ஜோதிபாசு பிரதமராக இருந்திருந்தால் ஆட்சி நன்றாக நடந்திருக்கும் என்கிறாரே வ. கம்யூனிஸ்ட் தலைவர் பர்தான்...?

! 'டெல்லி சலோ' கோஷம் கல்கத்தா முழுவதும் முழங்குகிறதே... பர்தான் பேசுவதில் ஆச்சர்யமில்லை!

● வி. பி. மகராசி சிவம், மதுரை – 16.

? இந்த முறை ரஜினி என்ன சொன்னாலும் அது தமிழக மக்களிடம் எடுபடாது' என்கிறாரே ஜெயலலிதா...?

! ஊழல் புரிந்தாலும் அரசியல் சாணக்கியமாவது 'ஜெ'க்கு உண்டு என்று நினைத்தோம். அதுவும் பூஜ்யம் என்பது புரிந்து போயிற்று! ரஜினி ரசிகர்களின் ஆதரவைத்தான் இதுவரை இழந்திருந்தார். இப்போது அவர்களைப் பகைத்துக் கொண்டுவிட்டார்!

• மோதப்....




• ...போகிறார்கள்...?

## நீங்கள் கேட்டவை — தராசு

# காப்பாற்றுவாரா சோனியா...?

● டி. ராஜலட்சுமி, சிதம்பரம் – 1.

*? அரசு அதிகாரிகள் தமிழில் எழுத வேண்டும் என்று தமிழ்க்குடிமகன் வலியுறுத்துகிறாரே...?*

! எந்த மொழியில் எழுதினாலும் சரியாக எழுத வேண்டும்; நேர்மையாக எழுத வேண்டும் என்பது தான் நம்மைப் போன்றவர்களின் வேண்டுகோள்.

● டபுள்யூ. வீ. துக்காராம், அம்மையப்பன்.

• நேர்மை போதுமே!



*? தேர்தலில் காங்கிரஸைக் காப்பாற்ற சோனியா காந்தி வருவாரா...?*

! வற்புறுத்தலுக்கு இணங்கி, வந்து, மம்தா பானர்ஜியிடம் மூக்குடைபட்டிருக்கிறாரே!

● வீ. எஸ். அனந்தராமன், சென்னை – 78.

*? ரஷ்யாவில், 3.5 மீட்டர் உயர லெனின் சிலையை வாங்குவதற்கு ஆள் இல்லையாமே...?*

! நம் நாட்டிலுள்ள சிலைகளை விற்பனைக்கு வைத்தாலும் வாங்க ஆள் இருக்காது!

• போஸ்டர் பிரச்னை!





• டெல்லி சலோ!

● மு. இரவிச்சந்திரன், சேலம் – 9.

*? உ.பி. பள்ளிக்கூட மாணவர்கள் இனி 'அட்டெண்டன்ஸ்' சொல்லும்போது, 'உள்ளேன் ஐயா!' என்பதற்குப் பதில் 'வந்தே மாதரம்' என்று தான் சொல்ல வேண்டுமாமே...?*

! அழகான ஏற்பாடு. இந்தியா முழுவதும் அமுல் படுத்தலாம்.

● ஆர். ஷண்முகம், கும்பகோணம் – 1.

*? டீ.வி.க்கு சினிமா பாடல்களைத் தருவது, புத்தாண்டு முதல் நிறுத்தப்படும் என்று தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர்கள் முடிவு செய்திருப்பது யாருக்கு சார் நஷ்டம்...?*

! நிச்சயம் சினிமாக்காரர்களுக்குத்தான். சுலபமான விளம்பர மீடியாவைப் புறக்கணிப்பதால், வேறு யாருக்கு நஷ்டம் வருமாம்...?!

● ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.

*? ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கையில், தி.மு.க. மீதோ மற்ற எந்த அரசியல் கட்சி மீதோ குற்றம்சாட்டவில்லை என்கிறாரே நீதிபதி ஜெயின்?*

! இதில் பெருமளவு உண்மை இருக்கிறது. வெளியாகியிருப்பது இடைக்கால அறிக்கையே; இறுதி அறிக்கை வரும் வரை பொறுத்திருப்பதே சரி என்ற மூப்பனாரின் முடிவு வரவேற்கப்பட வேண்டியது. ஆனால், அறிக்கை 'லீக்' ஆனதில், அதிலும் பகுதி அளவே 'லீக்' ஆனதில், தி.மு.க.வுக்கும் ஐ.மு. ஆட்சிக்கும் பெரும் சேதம் ஏற்பட்டுப் போயிருக்கிறது. சமீபத்தில், இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழ் ஜெயின் இடைக்கால அறிக்கையை முழுமையாக ஆராய்ந்து, மற்றும் பல ஆவணங்களையும் ஆராய்ந்து, எதனால் காங்கிரஸ் இந்த அறிக்கை மீதான விவாதத்துக்கு இடந் தரவில்லை; ஐ.மு.வுக்கு ஆதரவை வாபஸ் வாங்கியது... என்பதையெல்லாம் தெளிவுபடுத்தியிருக்கிறது. விடுதலைப் புலிகளுக்கும் தமிழ் ஈழத்துக்கும் இந்திரா – ராஜீவ் அரசுகள் கொடுத்து வந்த ஆதரவைப் பிட்டு பிட்டு வைக்கிறது! அது மட்டுமல்ல... உயிரைப் பணயமாக்கி, அமைதிப் படை புலிகளுடன் போராடுகையிலேயே ராஜீவ் புலிகளுக்கு ஆதரவாகச் செயல்பட்டார் என்பது அதிர்ச்சி தரும் செய்தி.

● செ. ரோஜா, நாட்டரசன்கோட்டை. ❑

*? VDIS மூலம் வருமான வரி செலுத்தியதில் சென்னைக்குத்தான் முதலிடமாமே...?*

! இதிலென்ன பெருமை...?! அவர்கள் வருவாயைக் கறுப்பு பணமாகக் குவித்து வைத்திருந்த காலகட்டத்தில் ஒழுங்காக வரி செலுத்தியவர்கள் பலர் இருந்தார்கள் என்பதுதான் பெருமை. VDIS சலுகையை மிக அதிகமான பேர் பயன்படுத்திக் கொண்டார்கள் என்பது தமிழகத்தின் தலைகுனிவே! இனியாவது திருந்துவார்களா, பார்ப்போம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
செ. ரோஜா,
6/5, பட்டினத்தார் தெரு,
நாட்டரசன்கோட்டை - 630 556.



# “மதுரை ரவுடிப் பயலுக ஊரா?”

## — போலீஸ் கமிஷனர் பேட்டி

**மா**நகராட்சிகளிலேயே போக்குவரத்து நெரிசலில் அதிகம் சிக்கித் தவிப்பது மதுரைதான். இதே விகிதத்தில் வாகனப் பெருக்கம் இருந்தால் 2002ல் விரைந்து செல்ல ஒரே வழி- நடப்பதாகத்தான் இருக்கும் என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறார்கள், புள்ளி விவரம் எடுப்பவர்கள்.

போக்குவரத்து நெரிசலில் சிக்கித் தவிக்கும் மதுரைக்கு விமோசனமே கிடையாதா? கேட்டபோது, மதுரை போலீஸ் கமிஷனர் விஸ்வநாதன் ஐ.பி.எஸ். சொன்னார்...

“இயல்பிலேயே மதுரை நகரின் அமைப்பு அப்படி அமைக்கப்பட்டு விட்டது. கோயில்களையோ, கடைகளையோ இடித்துத் தள்ளி விட முடியாது. எனவே சாலைகளின் அகலம் அவ்வளவுதான். இதற்குள் நாம் காலத்தை ஓட்டியாக வேண்டும். வாகனப் பெருக்கத்தையும் நாம் தடை செய்ய முடியாது. யாரையும் புதிதாக வாகனம் வாங்காதே என்று தடுக்க முடியுமா? எனவேதான் முடிந்தளவு ‘நோ என்ட்ரி’, ‘ஒன் வே’க்களை அறிவித்து நெரிசலை ஓரளவு தவிர்த்துள்ளோம். வைகையில் புதிதாக மூன்று பாலங்கள் கட்டப்பட்டுள்ளதால் பாலங்களில் நெரிசல் குறைந்துள்ளது. லாரிகளை குறிப்பிட்ட நேரத்தில்தான் நகருக்குள் அனுமதிக்கிறோம். இப்படி நம்மால் செய்ய முடிந்ததை எல்லாம் செய்து கொண்டிருக்கிறோம்.

“எதிர்காலம் பற்றிய பயம் உண்மைதான் என்றாலும், அதற்குள் நகரைச் சுற்றி லிங்க் மற்றும் ரிங் ரோடுகள் தயாராகி விடும். பஸ் ஸ்டாண்டும் உத்தங்குடிக்குப் போய் விடும். சென்ட்ரல் மார்க்கெட்டை இடம் மாற்றும் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. எனவே ரொம்பவும் பயப்படத் தேவையில்லை.

“போக்குவரத்து போலீஸாருக்கென்று புதிதாக ஏழு ஜீப்புகள் பெறப்பட்டுள்ளன. எனவே அவை விரைந்து செயல்பட்டு ட்ராஃபிக் ஜாம்களை உடனுக்குடன் சரி செய்து விட முடியும். என்னதான் முயற்சிகள் எடுத்தாலும் பொது மக்களும் பார்க்கிங் இல்லாத இடங்களில் வண்டியை நிறுத்துவது, மஞ்சள் கோட்டை மதிக்காது ஓவர் டேக் பண்ணுவது, நோ என்ட்ரியில் போவது போன்ற தவறுகளையெல்லாம் தவிர்க்க வேண்டும்” என்றார் கமிஷனர்.

“மதுரையில் அதிகமாக நடக்கும் குற்றம் எது? அதைத் தடுக்க என்ன நடவடிக்கைகள் மேற்கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டபோது, “புறநகர்ப் பகுதிகளில் மாலை நேரங்களில் டூவீலர்களில் வந்து செயின் அறுத்துப் போவதுதான் அதிகம் நடக்கிறது. இதைத் தடுப்பதற்காக மாலை நேரங்களில் ரோந்துப் பணிகளை அதிகரித்துள்ளோம்” என்றார்.

“உங்கள் பார்வையில் மதுரை எப்படி? ரவுடிப் பயலுக ஊரா?” என்றபோது, “எந்த ஊரில்தான் ரவுடிகள் இல்லை?” எல்லா ஊர்களிலுமே ரவுடிகளும் இருப்பார்கள். நல்லவர்களும் இருப்பார்கள். மதுரையும் அப்படித்தான். மற்றபடி மதுரை எனக்குப் பிடித்த ஊர்தான்!” என்றார்.

சென்னையைப் போல மதுரையிலும் இடிமன்னர்களை ஒடுக்க பெண் போலீஸ் படை அமைக்கப்படுமா என்ற கேள்விக்கு, பதிலளிக்க மறுத்து விட்டார் கமிஷனர். ஏனோ? ●

படம், பேட்டி: **கிரண்நியூஸ்**

# சிரிகம...



"நீங்கதானே பக்கவாத்தியத்துக்கு சீனியர் ஆர்டிஸ்டா பார்த்துப் போடச் சொன்னீங்க..."



"என்ன ஆடிடோரியத்துல ஒரே தும்மல்?"
"ரசிகர்கள் இசை மழையில நனையறாங்க இல்லை?"

"என்ன பாதி கச்சேரியோட நிறுத்திட்டாங்க?"
"அதுவரைக்கும்தான் ஸ்பான்ஸர் பண்ண ஆள் கிடைச்சுதாம்."





"என்ன ஒரு குருபக்தி பார்த்தியா...?"
"நீ வேறே... அது அவ குரு இல்ல... விமர்சகர் விஸ்வநாதன்!"

ரேஜீ -

# ...சரிகம!

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்களுக்குத் தன்னம்பிக்கை கொஞ்சம் ஜாஸ்தி. அதனால், இந்த வாரம் துணிச்சலா சில காரியங்கள்ல இறங்கி, பலரும் ஆச்சரியப்படற விதத்துல வெற்றி காண்பீங்க. கோவில் திருப்பணி அல்லது வேற எதாவது தர்ம காரியங்கள் செய்ய வாய்ப்பு வரும். தவறாம, முடிஞ்சதைச் செய்யுங்க. ஆபீஸ்ல சிலருக்குப் புதிய பொறுப்புகள், கூடுதல் பளு வந்து சேரும். பொறுமையா செயலாற்றினீங்கன்னா, புகழ் தேடி வரும். பெண்களுக்குப் பயண சாத்தியங்கள் தெரியுது. அது, பக்கத்து ஊர்ல இருக்கற அம்மா வீட்டுக்காகக் கூட இருக்கலாம்!



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோஹிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க வளர்ச்சியைப் பார்த்துப் பொறாமைப் படறதுக்குன்னே ஒரு கூட்டம் உருவாயிட்டு இருக்குது. பொறாமை, எதிர்ப்பாக

## நடக்குமென்பார்,

வும் கவிழ்ப்பு நடவடிக்கையாகவும் மாற வாய்ப்பு இருந்தாலும், உங்க சாமர்த்தியத்தால எதையும் சமாளிச்சுடுவீங்க. எழுத்து, இசை, ராணுவத் துறைல இருக்கறவங்களுக்கு இது பிரமாதமான வாரம். அலைச்சல், களைப்பு உண்டுன்னாலும் தாராளமான பணப்புழக்கமும் சில உல்லாச அனுபவங்களும் அதை ஈடுகட்டிடும். பெண்கள் மட்டும் வீண் வம்புகள் பக்கம் போகாம இருக்கறது நல்லது.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

நிர்வாகத் திறமைல உங்களை அடிச்சிக்க ஆளே கிடையாதுங்க. உங்க வெற்றியோட மூலதனமே உங்க புத்திசாலித்தனம்தான். இந்த வாரம் எதிர்பாராத ரெண்டு மூணு வழிகள்ல உங்களுக்குப் பணவரவு இருக்கும். குறிப்பா விளம்பர ஏஜென்ஸிகாரங்க காட்டுல மழை. ஆனா, தொழிலதிபர்கள் எச்சரிக்கையா இருக்கணும். அகலக்கால் வெக்காம, யோசிச்சி செயல்பட்டீங்கன்னா பிரச்னை வராது. டெக்னீஷியன்களும் ஆட்டோ, டாக்ஸி டிரைவர்களும் ரொம்ப நிதானம் காட்டணும். சிறு விபத்துகள் நேரலாம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பத்திரிகையாளர்களுக்கு வளமான வாரம் இது. தொழில்ல நல்ல வளர்ச்சி இருக்கும். (கல்கி ஆசிரியர் என்ன ராசிங்க?) நீண்ட காலமா நிலுவைல இருக்கற கோர்ட் கேஸ்கள் இப்ப ஒரு முடிவுக்கு வரும். அரசு ஊழியர்களுக்குப் புதிய பொறுப்புகள், சிலருக்கு இடமாறுதல் கூட இருக்கலாம். வாரத் தொடக்கத்துல சிலருக்கு உடம்பு படுத்தும். மருத்துவ செலவைத் தவிர்க்க முடியாது. சிலபேர் புண்ணிய யாத்திரைகள் போவாங்க. பெண்களுக்கு மட்டும் உல்லாச அனுபவங்கள் இருக்கும்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

(ல் உள்ள உச்ச கிரகம் உங்களுக்கு நல்ல பராக்கிரமத்தைத் தரப் போவுது. இதனால தொழில்ல வரக் கூடிய பெரிய எதிர்ப்புகளை எல்லாம் கூட 'ப்பூ...'ன்னு ஊதித் தள்ளிடுவீங்க. இந்த வாரம் மூளை வேலை பார்க்கறவங்க (எழுத்து, கம்ப்யூட்டர் இன்னபிற) காட்டுல மழை. முன்னேற்றத்துக்கான எல்லா கதவுகளும் திறந்திருக்கும் போது, உற்சாகமா உழைக்க என்ன தடை? ஆனா சில பேருக்கு குடும்பப் பிரச்னைகள் காரணமா, லேசா மன சஞ்சலம் இருக்கும். பெண்களுக்கு ரத்தம் சம்பந்தமான நோய் வர வாய்ப்பு இருக்கு. கலைத் துறையினர் பொறுப்போட செயல்பட்டாலே, நல்ல பெயர் எடுக்க முடியும்! கொடுக்கல் வாங்கல் இந்த வாரம் வேணாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

மகான்கள் - சாதுக்கள் தரிசனம், தல யாத்திரை இப்படி ஏதாவது பக்தி மார்க்க காரியத்தைத் தவிர்க்க முடியாது. வயசுல மூத்தவங்க, நண்பர்கள் உதவுவார்கள். பெண்களுக்குப் புதிய ஆடைகள் வாங்கற யோகம் இருக்கு. கீழ்மட்ட அலுவலகப் பணியாளர்களுக்கு உத்தியோக ரீதியில நல்ல பலன்கள் இருக்கு. அரியர்ஸ் எதாவது பாக்கி இருந்தா இப்ப வரும்! அதே மாதிரி, சப்ஜெக்டுல அரியர்ஸ் வெச்சிருக்கற ஸ்டூடன்ஸும், இந்த வாட்டி தேறிடுவாங்க!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

உறவினர் வருகை, உல்லாசம், கேளிக்கை, புதிய நகை, ஆடைகள் வாங்கற யோகம் - இந்த வாரம் முழுக்கவே நீங்க உலக அழகிக்கு இணையா குஷியா இருப்பீங்க. ஆனா

மனை, வீடு வாங்கற விஷயத்துலயும், ஷேர் வாங்கற விஷயத்துலயும் சறுக்கற சான்ஸ் இருக்கு! கவனமா இருங்க. சிலபேருக்கு ஃபாரின்லேருந்து நல்ல தகவலோ, ஃபாரின் போற சான்ஸோ இருக்குது. வயசானவங்க, ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் படியா அவங்க பிள்ளைங்க நடந்துப்பாங்க.

**விருச்சிகம் :** *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



வழக்குகள் சீக்கிரம் பைசலாயிடும் சார்! தன்னம்பிக்கை இழக்காம செயலாற்றினீங்கன்னா வெற்றி நிச்சயம். இந்த வாரம் மொத்தத்துல பெண்களுக்கு சாதகமா இருக்கறாப்பல தெரியுது. நினைச்சது நடக்கும். வீட்டுலயும் சரி, வெளியிலும் சரி, மதிப்பு உயரும். சினிமா, அது இதுன்னு உல்லாசத்துக்குக் குறைவு இல்லை. சில பெண்கள், பேப்பர்ல பேர் வராப்பல சாதனைகள் புரிவாங்க. பயணங்கள் இருக்கும். சிறுசிறு தொல்லைகள் - முதலாளிங்களுக்கு - இருக்கும். குழந்தைகள் ஆரோக்கியத்துல கவனமா இருங்க. வாரக் கடைசில அரசியல்வாதிகளுக்கு சில சோதனைகள் உண்டாகலாம்.



சிம்மராசிக்காரரான முன்னாள் கிரிக்கெட் வீரர் ஸ்ரீகாந்த். தொழில்ல வரக்கூடிய பெரிய எதிர்ப்புகளையெல்லாம் 'ப்பூ'ன்னு ஊதித் தள்ளிடுவாராம்!

# நடக்கும்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



எதிலும் இடைஞ்சல், தடை இருக்கும்னாலும் இறுதி வெற்றிக்குப் பங்கம் வராது! பொருளாதார ரீதியில சில பிரச்னைகள் இருக்கும். தேவைப்பட்டபோது, பணத்தட்டுப்பாடு உண்டாகலாம். பெரிய செலவு இல்லாதபோது, தாராளமா பணம் இருக்கும்! நேரம் அப்படி! இந்த வாரம் வங்கி ஊழியர்களுக்கு வளமா இருக்கும். சிலர் வீடு, ஃப்ளாட் வாங்குவாங்க. தொழிலதிபர்கள் வார முற்பகுதி பிரச்னை இல்லாமல் இருந்தாலும் பின்னால சில லேபர் பிரச்னைகளைச் சந்திக்க வேண்டி வரலாம். கணவன் - மனைவி உறவுல சிறு ஊடல்கள் வந்து போகும். முருக வழிபாடு, நல்லது செய்யும்!

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



கடுமையா உழைச்சாத்தான் பலன் கிடைக்கும். அப்பவும் போட்டி, பொறாமைக்குக் குறைவு இருக்காது. எண்ணெய், ரசாயனம் சம்பந்தப்பட்ட துறைல இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் இருக்கும். குழந்தைகளால் மகிழ்ச்சி - சிலபேருக்கு; அதாவது, குழந்தை பிறக்கலாம்; அல்லது, நீங்க பெருமைப் படறாப்பல ஏதாவது காரியத்தை அவங்க செய்வாங்க. இந்த வாரம் யாருக்கும் கடன் குடுக்காதீங்க; வாங்காதீங்க. கட்டாயம் பிரச்னை வரும். எதிலும் நிதானம், கவனம் முக்கியம்!

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



சூரியன், புதனின் சஞ்சார பலத்தால் இந்த வாரம் பிரமாதமா அமையப் போவுது, உங்களுக்கு! திட்டமிட்டு செயல்பட்டீங்கன்னா வெற்றி கேரண்டி! எழுத்தாளர்களுக்கும், கணக்கு சம்பந்தமான துறைல இருக்கறவங்களுக்கும் புகழோட கூடப் பணமும் சேரும் வாரம் இது. மத்தவங்களுக்கும் வளர்ச்சி சீராவே இருக்கும். சில பேருக்கு விருந்து, கேளிக்கை அனுபவங்கள் வாய்க்கும். லக்னத்துல இருக்கற கிரக பலத்தால, உணர்ச்சிவசப்பட்டு வீண் மனஸ்தாபங்கள் உண்டு பண்ணுவீங்கன்றது தான் ஒரே குறை!

**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



புதிய அறிமுகம் ஒண்ணு இந்த வாரம் கட்டாயம் உண்டு. அந்த நண்பர் உங்களுக்கு மிக அவசியமான ஒரு கட்டத்துல உதவி செய்து நெகிழவெப்பார்! சிலபேர் புதிய டூவீலர்கள் வாங்குவாங்க. கணவன் - மனைவி உறவு, பிரச்னை இல்லாம சீரா போவும். சில சமூக நலக் காரியங்கள் செஞ்சு உங்கள்ல சிலர் நல்ல பேர் வாங்குவீங்க. பதவி உயர்வு, மேலோர் பாராட்டு, சாது தரிசனம்... வளர்த்து வானேன்? உங்களுக்கு டக்கரான வாரம் இது!

**டிசம்பர் 24 முதல் 30 வரை**

## வட்டமேஜை

# அமெரிக்கா என்ன; அமிஞ்சிகரை என்ன!

✉ இந்த வார இதழில் இசை சம்பந்தமான நகைச்சுவைத் துணுக்குகளை எழுதியவர்களின் பெயர்களும் ராகத்தின் பெயர்களாகவே உள்ளனவே! இது என்ன இசை விழா ஸ்பெஷலுக்காகக் கல்கி செய்த கைங்கர்யமா?

சென்னை – 1, கே.ஆர். உதயகுமார்.

✉ மதநல்லிணக்கத்துக்கு இலக்கணமாகத் திகழ்ந்த தமிழகம் இன்று கலவர பூமியாகி வருவதைப் பார்க்கும்போது நெஞ்சில் குண்டு வெடிக்கிறது.

மயிலாடுதுறை, ஜெ. ரஜினி ராம்கி.

✉ பருவக் காற்று மழை பதம்பார்த்து ஒய்ந்த சமயத்தில் இசை மழையில் நனைந்தது, இதழ். இசைப் பிரியர்களுக்கு இதழ் முழுவதும் ரசனைக்குகந்ததாய் இருந்தது! பாராட்டுக்கள்.

வலையபட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ தை பிறக்கும் வேளையிலே... 'கல்கி'யின் பொன்னியின் செல்வன் (தொடர்) கதை படிக்க வழிபிறக்கிறது... வேறென்ன, இனி ஆனந்தம்... ஆனந்தம்தான்...!

சூரனூர், எஸ். காளிதாஸ்.

✉ கோவை, சென்னை வாசகர்களுக்கு மட்டும் ஸ்வீட் பாக்கெட் கொடுத்து விட்டு எங்களுக்கு 'அல்வா' கொடுக்க எண்ணமா?

நாமக்கல், மாணிக். செந்தில்.

✉ பம்பாய் பற்றி ஜெயஸ்ரீ ராஜ் வெளுத்துக் கட்டுகிறார்! விட்டால் பம்பாய் பற்றி ஒரு புத்தகமே எழுதி விடுவார் போலிருக்கிறது!

சென்னை – 18, எஸ். சுவாமிநாதன்.

✉ 'அன்னமாச்சார்யா' படம் 60 தியேட்டர்களில் 200 நாட்களைத் தாண்டி ஓடிக் கொண்டிருப்பது எனக்கு மட்டுமல்ல, தமிழ்த் திரையுலகுக்கும் ஆச்சரியத்தை உண்டாக்கும் என நினைக்கிறேன்.

கோவை, ஏ. எஸ். இராமசாமி.

✉ ஏதாவது ஒரு துறையில் பிரபலமான மனைவியையோ, அல்லது கணவனையோ பெற்றவர்கள் ஈகோ பிரச்னையில்லாமல், எப்படி வெற்றிகரமான தம்பதிகளாகத் திகழ்வது என்று அருமையாக விளக்கம் கூறினார்கள் ரகுநாதன் மற்றும் சாந்த லட்சுமி ஆகியோர்.

திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

✉ தி.மு.க. – த.மா.கா. கூட்டணி தொடர வேண்டும் என்ற உமது ஆவல்... தமிழக மக்களின் நலன் கருதியதே... என்பதை வெளிப்படுத்தியது தலையங்கம்.

உத்திரங்குடி, வி. கவிதா.

✉ 'ரிஷபன்' எழுதிய மூன்று கதைகளும் முத்தானவை. உடலில் ஊனம் இருந்தாலும் பரவாயில்லை. மனதில் ஊனம் இல்லாமல் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் வகையில் அமைந்திருந்தன. பாராட்டுக்கள்.

தஞ்சை – 5, சித்ரா ராதாகிருஷ்ணன்.

✉ தன் மகள் இறக்க மாட்டாள், பிழைத்து விடுவாள் என்ற பேஜின் நம்பிக்கையும் பிரார்த்தனையும் வீண் போகவில்லை. அமெரிக்காவாக இருந்தால் என்ன அமிஞ்சிகரையாக இருந்தால் என்ன? தாய்க்கு நிகர் தாயே! 36 வாரங்கள் எல்லோர் மனதிலும் ஆலிஸனும் - பேஜூம் நிறைந்திருந்தார்கள். ரா. கி. ரங்கராஜன் அவர்களுக்கு வணக்கங்களும் வாழ்த்துக்களும்.

கோவை – 30, செந்தில்.

✉ பேஜை விட கண்மணி ஆலிஸன் கோமாவிலிருந்து விடுபட்டு, கண் திறக்க வேண்டும்; நலம் பெற வேண்டும் என்ற துடிதுடிப்பு வாசகர்களாகிய எங்களுக்குத்தான் அதிகம். அந்த அளவிற்கு ரா.கி.ர. அவர்கள் நாவலுடன் எங்களை ஒன்றிடச் செய்து விட்டார். நீரோட்டமான அந்த நடை வாகவும் அற்புதமானது.

சென்னை – 32, எம். எஸ். இராகிம்.

✉ வாரா வாரம் 'அடுத்து என்ன?' என்று எதிர்பார்க்கக்கூடியதாக இருந்தது 11:29 தொடர். கதாபாத்திரங்களின் பெயர்கள் மட்டும்தான் ஆங்கிலப் பாணியில் இருந்தன. மொழிபெயர்ப்பு என்று தெரியாவண்ணம் நல்ல தமிழ் நடையில் படிக்க அழகாகவும் அற்புதமாகவும் இருந்தது. 'ஜெ'யின் வண்ணப்படங்கள் கதைக்கு மெருகூட்டுவதாக எடுப்பாக இருந்தன.

விருதுநகர், ஆர். எஸ். சங்கரநாராயணன்.

✉ நாடு மாறலாம்; கண்டம் மாறலாம்; கலாசாரம் மாறலாம்; ஆனால் தாய்மை உணர்வு மாறாதது என்று புரியவைத்தது பேஜ் பாத்திரம். அந்நிய நாட்டுக் கதை என்ற விலகல் உணர்வு இன்றி ஒன்றிப் போக வைத்த மொழிபெயர்ப்பு, நாவலாசிரியர், மொழிபெயர்ப்பாளர், கல்கி ஆசிரியர் மூவருமே பாராட்டுக்குரியவர்கள்.

சென்னை – 89, டி. என். இளங்கோவன்.

# படித்த படிப்பெல்லாம் கசாப்புக் கடை வைக்கவா?

## — ஒரு பட்டதாரிப் பெண்ணின் கதை!



பி.எஸ்ஸி., முடித்துவிட்டு, கம்ப்யூட்டர் கோர்ஸும் படித்து, கராத்தேயில் பிரவுன் பெல்ட், சிலம்பத்தில் 16 வீடு கட்டும் திறன், துப்பாக்கி சுடுதலில் மாவட்டத்தில் இரண்டாமிடம் என்றெல்லாம் இன்னபிற தகுதிகளையும் வளர்த்துக் கொண்டு, கசாப்புக் கடையில் 'பிராய்லர் கோழிகளை' உரித்து வெட்டுகிறாரென்றால்... அதுவும் இதே போன்று நான்கு கசாப்புக் கடைகளைக் கோவையில் நிர்வகிக்கிறாரென்றால் நம்ப முடிகிறதா?

இத்தனைக்கும் இவர் குடும்பமும் இத்தொழிலை பின்னணியாகக் கொண்டதல்ல. என்கிறபோது ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை. "ஏன் இப்படி?" என்று நாகலட்சுமியிடமே கேட்டோம்.

"கம்ப்யூட்டர் கோர்ஸ் முடித்தவுடன் மூன்று மாதம் புரோக்ராமராக ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை பார்த்தேன். மற்றவர்களின் ஆளுமையும், நான் அடிமைப்படுதலும் உள்ளூரப் பிடிக்கவில்லை. சொந்தமாகத் தொழில் செய்தால் என்ன என்று தோன்றியது. குறைந்த முதலீடாகவும் இருக்க வேண்டும். நாம் முதலீடு செய்யும் பொருளுக்கு அடுத்தடுத்த தேவையும் இருக்க வேண்டும் என்று யோசித்தேன்.

"அப்போது எங்கள் வீட்டிற்கு அருகிலேயே பூமிநாதன் என்பவர் பிராய்லர் கடை நடத்திக் கொண்டிருந்தார். ஏனோ என்னையறியாமல் அத்தொழில் மீது ஆர்வம். அவர் கொடுத்த தூண்டுதல்... அதில் கறி வெட்டிப் பழகினேன். அதன் பிறகுதான் அவர் எடுக்கும் பண்ணையிலேயே கோழி வாங்கி நானும் விற்பனை செய்வது எனத் தீர்மானித்தேன்.

"ஒரு பெண்... அதுவும் படித்த பெண் இத்தொழிலுக்கு வருவது குறித்து ஆச்சர்யப்பட்ட பண்ணையாளர்கள் ரொம்பவும் உற்சாகமாக என்னை ஊக்கப்படுத்தி உதவியும் செய்தனர். கடைத் திறப்பு விழாவை அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி அவர்கள் வந்து செய்தது கூட என்னை ஊக்கப்படுத்தும் கண்ணோட்டத்துடன் தான்.

"இந்தக் கடை திறந்து நான்கு மாதம் ஆகிறது. இப்போது நான்கு கடைகளை நானே என் நட்பையும், சொந்தங்களையும் வைத்து நிர்வகித்து வருகிறேன். பிராய்லர் கோழி விற்பனையைப் பொறுத்தவரை தங்கம் விலை போல் வாரத்திற்கு இரண்டு மூன்று முறை ஏற்ற இறக்கமிருக்கும். இதைக் கவனித்து நிர்வகிப்பதிலேயே கெட்டிக்காரத்தனம் வேண்டும். இதற்கு நிதி வசதி இருந்தால் இன்னும் சிறப்பாகச் செய்ய முடியும். (இதுவரை 25,000/- முதலீடு). ஹோட்டல், கம்பெனி கேண்டீன் என்று பல பெரிய ஆர்டர்கள் கைவசம் வந்தும் அதை விட்டுவிட்டதற்குக் காரணம், முதலீடு போதாமைதான். கொஞ்சம் வங்கிகள் கண் திறந்தால் தேவலாம்...!" என்று வேகத்துடன் கூறும் நாகலட்சுமி அதைவிட வேகமாய் பிராய்லர் வெட்டுகிறார்!

கட்டுரை, படம்:
**கா. சு. வேலாயுதன்.**



# கருணை வெள்ளம்; கண்டிப்பின் சிகரம்!

**டிசம்பர் 25, கிறிஸ்துமஸ் தினம், ராஜாஜி அமரரான நாள். மத்திய, மாநில அரசுகளில் பல்வேறு நிலைகளில் உயர் அதிகாரியாகப் பணியாற்றியுள்ள எம்.பி. பாய் (ஐ.ஸி.எஸ்.), ''ராஜாஜி என் எஜமானர்'' என்ற தலைப்பில் எழுதிய ரசமான கட்டுரையின் கடைசி பகுதி இது:**

ராஜாஜி சுதந்திரா கட்சியைத் தொடங்கி, அதன் தலைவராக விளங்கி வந்த தருணம். கட்சியின் தேர்தல் பிரசாரத்துக்காக, 1961ல் ஒருமுறை ஆந்திரப் பிரதேசத்துக்கு வந்தார்.

அப்போது நான் அந்த மாநில அரசில் உயர் அதிகாரியாகப் பணியாற்றி வந்தேன். ராஜாஜி வரப் போகிறார் என்று தெரிந்ததும் எனது முன்னாள் எஜமானரை வரவேற்கத் தயாரானேன். ஆந்திரப் பிரதேச அரசின் சம்மதத்துடன் முதலில் அவருக்குக் கடிதம் எழுதினேன். ''ஹைதராபாத், விஜயவாடா, விசாகப்பட்டினம் ஆகிய நகரங்களில் நீங்கள் ஆந்திரா அரசின் விருந்தினராகவே இருக்கலாம். இங்கெல்லாம் அரசாங்கத்தின் விருந்தினர் மாளிகைகள் உள்ளன. அங்கு வசதியாகத் தங்கிக் கொள்ளலாம்'' என்று எழுதினேன்.

ராஜாஜி நன்றி தெரிவித்து பதில் போட்டார். அதே கடிதத்தில் எனது கோரிக்கையை ஏற்க மறுத்தும் விட்டார். எனக்கு ஏமாற்றமாகப் போய் விட்டது. என்றாலும் நான் அவரைச் சந்திக்க ஒரு மலர் மாலையுடன் விமான நிலையம் போனேன். ராஜாஜியிடம் இருந்த அன்பும் மரியாதையும் என்னை இயக்கின. என் வாழ்நாளிலேயே இரண்டு தடவைகளில்தான் நான் இப்படிச் செய்திருக்கிறேன்! அதில் ஒன்று ராஜாஜியை வரவேற்க நான் ஹைதராபாத் விமான நிலையம் சென்றதாகும்.

பல ஆண்டு இடைவெளிக்குப் பிறகும் ராஜாஜி என்னை உடனே அடையாளம் கண்டு கொண்டார். மாலையைப் பார்த்துவிட்டு, சிரித்துக் கொண்டே, ''இது, நீ காசு கொடுத்து வாங்கியதா? அல்லது, அரசாங்கத்தின் சார்பில் அணிவிக்க வந்திருக்கிறாயா?'' என்று கேட்டார்!

''இது என்னுடைய தனிப்பட்ட வாழ்த்து'' என்று சொன்னேன்.

''அப்படியானால் சரி'' என்று அவர் சந்தோஷமாகத் தலையை நீட்டி மாலை சூட அனுமதித்தார்! நன்றி கூறவும் செய்தார்.

''விமான நிலைய வாசலில் அரசாங்கத்தின் கார் காத்திருக்கிறது. 'லேக் வியூ' அரசு விருந்தினர் மாளிகையில் உங்களுக்கு அறைகள் ஒதுக்கப்பட்டுள்ளன'' என்று சொன்னேன்.

கவர்னர் ஜெனரலாகவும், கவர்னராகவும், இருமுறை முதல்வராகவும் இருந்து, தேசத்துக்கு அளப்பரிய சேவை புரிந்திருக்கும் ஒருவர், இந்த வசதிகளைப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை என்றும் எடுத்துக் காட்டினேன்.

ஆனாலும் அவர் மறுத்து விட்டார். ''புருஷோத்தம்! இன்று நான் உன்னுடைய அரசாங்கத்தை எதிர்த்துப் போராட வந்திருக்கிறேன். அரசு விருந்தினராக இருந்து கொண்டு, அரசு வாகனத்தையும் பயன்படுத்திக் கொண்டு, இந்த ஆட்சியை எப்படி என்னால் எதிர்க்க முடியும்? (முதல்வர்) சஞ்சீவையாவுக்கு என் நன்றியைத் தெரிவியுங்கள். ஆனாலும் அவருடைய விருந்தோம்பலை ஏற்காததற்கு நான் வருந்துவதாகச் சொல்லுங்கள்'' என்றார்.

நன்றி : சுயராஜ்யா, டிசம்பர் 9, 1979

# 2

# டிசம்பர் கனவுகள்

### சென்ற வாரம்...

இசையுலக இளம்புயல் சௌதாமினி- என்றுமே நம்பர்-1. பட்டாபிராமனும் சிறந்த பாடகன் தான். ஆனால் சௌதாமினியின் இடத்துக்காக ஏங்குபவன். இந்நிலையில் அவளுக்குத் திருமணமாகிறது. மூன்று மாதத்தில் கச்சேரிக்காக யுஎஸ். போகப்போகிறாள். ஆனால்...

"அபஸ்வரம் மாதிரி சிரிக்காதே பட்டாபி! எவ்வளவு சீரியஸ்ஸான விஷயத்தைச் சொல்லியிருக்கேன்..."

"என்ன சீரியஸ்? வெறும் மொட்டைக் கடிதாச்! தூக்கி குப்பைல போட்டுட்டுப் போயிண்டேயிருக்க வேண்டியதுதானே, அமெரிக்காவுக்கு..."

"எழுதின அயோக்கியன் சங்கீதப்ரியா பத்திரிகைக்கு வேற நகலெடுத்து அனுப்பி வைச்சிருக்கான்... அவங்க அதைக் குப்பைல போடணுமே.... அதை விட்டுட்டுப் புலனாய்வு பண்றோம்னு எதையாவது கிளற ஆரம்பிச்சா என்னாகறது...?"

"ஒண்ணும் ஆகாது! அதுவும் நல்ல பப்ளிசிடின்னு சந்தோஷப்பட்டுக்கட்டும்..."

பின் மண்டையில் அடித்தாற்போன்ற பதில். சந்தேகப் பொறி கிளம்பி ஹிம்சிக்க ஆரம்பித்தது. தலையை உலுக்கி, அவசரமாக அதை வெளியேற்றினான். 'சே! இப்படியொரு எண்ணம் எனக்கு வரலாமா? மொட்டைக் கடிதமெழுதும் அற்பத்தனத்தைக் காட்டிலும் அற்பமான எண்ணம்! எப்படி வரப்போனது...? அதுவும் இந்தப் பால் வடிகிற முகத்தைப் பார்த்து! முகத்தை விடு! எப்பேர்ப்பட்ட கலைஞனவன்...! உணர்வுகளையெல்லாம் கடந்த உயர் நிலைக்கு இட்டுச் செல்கிறவன். 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நீ...' என்று ஆரம்பித்தானானால், 'யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்...' என்று ராகங்களில் வலம்வந்து முடிப்பதற்குள் கண்களுடன் மனமும் பொங்கிப் பொங்கி, தணிந்து அடங்கிவிடுகிறது.

அடுத்தவர் அமைதியைத் திட்டமிட்டுக் கலைக்கும் குரூரமெல்லாம் இவனிடமிருந்து ஜனிக்கவே முடியாது... ஆனால்...?

'ஆனால்...?' - உலகளவுக்கு அந்த வினா வளர்ந்து நின்றது.



## காஞ்சனா பிரகாஷ்ராவ்

பவித்ரா லகானிட்டு, நிலைக் குத் திரும்பினாள்.

''தியாகராஜன் ரொம்ப ரௌத்திரமாயிட்டார். அதுவும் சங்கீதப்ரியா லேயிருந்து போன் வந்தப்புறம் he was totally upset...''

''அதெப்படி நீ சரியா அந்த நேரத்துல போய்ச் சேர்ந்தே..?''

''இன்னும் இரண்டு நாள்ல அமெரிக்கா கிளம் பிடுவாளேன்னு சௌதாமினியை விஷ் பண்ணப் போனேன். பார்த்தா, இவ அழு தழுது கண்ணெல் லாம் வெங்காயமாப் போயிருந்தது... அந்த மனுஷர் ரௌத்திரா காரமாயிருந்தார். 'நான் போய்ட்டு அப்புறம் வரேன்'னு கிளம்பிட்டேன். சௌதாமினி யானா, கையைப் பிடிச்சுண்டு ஓரேயடியா அழுறா...''



சௌதாமினி அழுது ரொம்ப நாளாகி யிருந்தது. பதின்மூன்று வயதில், கோடை விடுமுறையில் ஹிந்தி கிளாஸ் போக வேண் டும் என்று அடம்பிடித்தபோது, 'வெயில்ல போகக் கூடாது' என்று அப்பா – அம்மா தடை பண்ணியதுதான் கடைசியாய் அனு பவித்த துக்கம். அதன் பிறகு, சமீபத்தில், கல்யாண தினத்தன்று... ''நீ எப்பவும் சிரிச் சுண்டேயிருக்கணும் சௌதாமினி...'' – எல்லாம் முடிந்து, விடைகொடுக்கும்போது, கன்னத்தை வழித்தபடி அகமதாபாத் பெரி யம்மா சொல்ல, அதற்காகவே காத்திருந்தது போல் அழுகை வெடித்தது! ஆனால், அது துக்கமில்லை... வகை பிரிக்க முடியாத உணர்வுக் கலவை!

இப்போது அழுவது கலப்

படமில்லாத துக்கத்தினால். பன்னிரண்டு வருடத்து துக்க 'கோட்டா'வை ஒரே நாளில் தூண்டிவிட்ட ஒற்றைக் காகிதம் மேஜை மேல் கிடந்தது.

நிறுத்தி, நிதானமாக யோசித்து டைப் அடித்த எழுத்துக்கள்.

மிஸ்டர் தியாகராஜன்.

உங்க புத்தம்புது மனைவி சௌதாமினி இருக்கிறாளே... அவளுக்கும் மிருதங்கம் ராஜா ராமனுக்கும் என்ன தொடர்பு தெரியுமா...? இதை உங்க கல்யாணத்துக்கு முன்னாடியே கேட்டிருக்கணும்... சந்தர்ப்பம் கிடைக்கல்லை... அமெரிக்கா போகற அவசரத்துல அவங்க இருப்பாங்க... அனுப்பி வைக்கறதுக்கு முன்னாடி கரெக்டா கேட்டுத் தெரிஞ்சுக்கங்க...'

தியாகராஜன் மேஜையை முறைத்தபடி உட்கார்ந்திருந்தான். மூன்று மாதங்களாக அவன் சிரிப்பையும் இளகலையும் மட்டுமே பார்த்து வருகிறாள். இந்த இறுக்கம் பய முறுத்தியது. குரோதமா? சந்தேகமா? கோபமா? வெறுப்பா...?

"இதை நாம பேசாம கிழிச்சுப் போட்டு டணும். வெறும் மொட்டைக் கடுதாசு..." அவன் கடிதத்தைக் காண்பித்தபோது சொன்னாள்.

வெடுக்கென்று திரும்பப் பிடுங்கிக் கொண்டான்.

"அவசரப்படறியே!" அந்த ஒற்றைச் சொல்லுக்குப் பிறகு அவன் பேசவில்லை.

சற்று நேரம் ஆறவிட்டு மெள்ள கையைப் பிடித்துக் கூப்பிட்டாள்.

"தியாகு..."

பதிலில்லை. எல்லாவற்றையும் துண்டித்து விட்ட விலகல்.

சௌதாமினி பயந்து போனாள்.

எவ்வளவு சுலபத்தில் நம்மைக் கொடுத்தோம்... இந்த மனிதனிடம்! ஏறக்குறைய சரணாகதி நிலை! எதற்காக...? இப்படி வெளியேற்றப்பட்டு குற்றவாளி போல் நிறுத்தப்படுவதற்காகவா...? ஓர் ஆணின் நம்பிக்கையைப் பெற இன்னும் எதைத்தான் சமர்ப்பிக்க வேண்டும்...?

அவனிடமே கேட்டாள் :

"தியாகு... நீங்க என்னை நம்பணும். நம்ப வைக்கறதுக்கு நான் என்ன செய்யணும்? சொல்லுங்க..."

அந்த அறையில் வேறு நபரே இல்லாதது போல் மௌனமாயிருந்தான்.

சௌதாமினியின் பயம் உச்சத்தை அடைந்தது. 'ஐயோ! ஐயோ!' என்று அலற வேண்டும்போலிருந்தது. ஒரு மூலையில் உட்கார்ந்து மெதுவாக அழ ஆரம்பித்தாள். விசும்பல் கேவலாகித் திணறியபோதும் அவன் அசையவில்லை.

அந்த இசைகேடான தருணத்தில் நுழைந்தவள்தான் பவித்ரா. சௌதாமினி அவளை எலும்பு நோகிறது போல் பிடித்துக் கொண்டு, விட மறுத்தாள். உடைந்த வார்த்தைகளில் நிலைமையைச் சொன்னாள். தியாகராஜன் உள்பக்கம், டைனிங் ரூமில் இருந்தான்.

"ஐயோ! நான் என்ன பண்ணுவேன், பவித்ரா! நாளன்னிக்குக் கிளம்பியாகணும். அதுக்குள்ளே இவருக்கு எப்படிப் புரிய வைக்கறது? எதை நிரூபிக்கிறது...?"

பவித்ரா பேசாமல் ஐந்து நிமிடம் உட்கார்ந்து யோசித்தாள். "போய் முகத்தைக் கழுவிட்டு வா... அவர்கிட்டே பேசலாம்..."

"ஸாரி மிஸ்டர் தியாகராஜன்! உங்க

## இந்த வருஷ கிறிஸ்துமஸ் ஸ்பெஷல்!

***இந்த வருடம் கிறிஸ்துமஸ் ஸ்பெஷலாக இறக்குமதி செய்யப்பட்ட கிறிஸ்துமஸ் மரங்களை எழும்பூரிலுள்ள ஒரு கடையில் விற்பனை செய்கிறார்கள். கும்பல் தெரிகிறது. நாலடி உயரத்தில் ஆரம்பித்து, பன்னிரெண்டு அடி வரை தத்ரூபமாய் இருக்கின்றன. (நாலாயிரத்திலிருந்து ஒன்பதாயிரம் வரை விலை! நிஜ மரத்தை விட காஸ்ட்லியாயில்லை!)***



***''எல்லாம் செயற்கை மரங்கள். பாலி புரொபிலின் என்ற சமாசாரம் கொண்டு சிங்கப்பூரில் தயாரிக்கப்பட்டு வருவது'' என்கிறார் விற்பனை செய்யும் மாணிக்கம் என்ற இளைஞர்.***

***நவராத்திரியின் போது பயன்படுத்தி விட்டு, அது முடிந்தவுடன், கொலு படிகளை பிரித்து எடுத்து, பேக் பண்ணி பரணில் வைத்து விடுவது போலவே, இந்த கிறிஸ்துமஸ் மரத்தையும் பார்ட் பார்ட்டாகப் பிரித்து, பரணில் வைத்து விடுகிற சௌகரியம் உண்டு. இதை சோப்பு போட்டு, சுத்தம் செய்து கொள்ளும் வசதியும் உண்டு என்பதால் ஏக கிராக்கியாம்!***

***– மௌஷ்மி***

தனிப்பட்ட விஷயத்துல தலையிடறேன்னு நினைக்கக் கூடாது..."

அவன் பதில் சொல்லவில்லை. எழுந்து போகாததே கூட நல்ல அறிகுறி. அவனுக்கும் பேச, தெளிவு பெற ஒரு மூன்றாவது நபர் தேவைப்பட்டிருக்க வேண்டும்.

"ஒரு மொட்டைக் கடிதத்துக்கு இவ்வளவு முக்கியத்துவம் தர லாமா...? அது எழுதறவனோட கோழைத்தனத்தைத் தவிர வேற எதையும் நிரூபிக்கறதில்லே..."

"..........."

"நீங்க மனசு கலங்கிப் போறது இயல்புதான். ஆனா, அது நியாயமில்லே... சௌதாமினியை நினைச்சுப் பாருங்க... அமெரிக்கா டூரை இனிமே ஒத்தி வைக்க முடியுமா...? இந்த வேதனையோட போனா, மூணு மாசம் எப்படி கச்சேரி பண்றது...?"

"கஷ்டம்தான்..." – வார்த்தை வந்து விட்டது!

"என்ன பண்ணலாம்...?"

தோளைக் குலுக்கினான்.

"நீங்க சௌதாமினி கிட்டே எப்படி நடந்துக்கணும்னு நான் தீர்மானிக்க முடியாது தியாகராஜன். ஆனா... ஒரு விஷயம் சொல்லலாம்..."

"..........."

"அவ்வளவு தூரம் நீங்க சந்தேகப்பட்டா, ராஜாராமன்கிட்டேயே போய்க் கேட்டுடலாமே...?"

நிமிர்ந்து பார்த்தான்.

"அவரோட போய்ச் சண்டைபிடிக்கச் சொல்லலை. நான்... ஏன்பா, இப்படியொரு லெட்டர் வந்திருக்கே, உனக்கெதாவது தெரியுமான்னு பிளெயினா கேட்டுட வேண்டியது தானே...?"

சௌதாமினி மூச்சைப் பிடித்துக் கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தாள். தியாகராஜன் மிக மெதுவாக அவளைத் திரும்பிப் பார்த்தான். கோபம் விரிசல் கண்டிருந்தது. பொத்தி வைத்த ஆசை வெள்ளம் திரும்பவும் கசிய ஆரம்பித்தது.

பவித்ரா சமயமறிந்து விடைபெற்றாள்.

## விருதுக்குப் பெருமை தந்தவர்!

ஞானபீட விருதுக்கே ஒரு பெருமையைத் தந்தவர் என்று மேதைகளால் பாராட்டுப் பெற்றவர் அண்மையில் மறைந்த டாக்டர் சிவராம்கரந்த். 96 வயது வரையில் பல்வேறு சாதனைகள் செய்து பெயரும் புகழும் பெற்றவர். இவர் ஒரு விவசாயி, எழுத்தாளர், திரைப்பட இயக்குநர், கதாசிரியர், தெருக்கூத்துக் கலைஞர், கவிஞர், கல்வியாளர், பறவையின வல்லுநர், சுற்றுச் சூழல் ஆர்வலர், அரசியல்வாதி என்று பல்வேறு துறைகளில் ஈடுபட்டுப் பணியாற்றி வெற்றி கண்டவர்.

1930–ஆம் ஆண்டில் விதவைகளின் மறுமணத்தை ஏற்பாடு செய்து நடத்தி வைத்துப் புரட்சி செய்தவர். பிறப்பால் பிராமணராக இருந்தபோதிலும் வேறு ஜாதியைச் சேர்ந்த லீலாவை மணம்செய்து கொண்டவர். காந்தியவாதியான இவர், மகாத்மாவோடு நெருங்கிய தொடர்பும் வைத்திருந்தார்.

1968-ஆம் ஆண்டு இவருக்கு இந்திய அரசு 'பத்மவிபூஷன்' பட்டத்தை வழங்கி கௌரவித்தது. ஆனால் 1975 ஆம் ஆண்டில் நாட்டில் அன்றைய பிரதமர் இந்திரா காந்தியால் அமலாக்கப்பட்ட அவசர நிலைச் சட்டத்தை எதிர்த்து தமக்கு வழங்கப்பட்ட பத்மவிபூஷன் பட்டத்தை அரசுக்கே திருப்பியனுப்பி விட்டார்.



"யக்ஷகானம்" எனும் தெருக்கூத்துக் கலை அழிந்து விடாமல் இருக்கப் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டார். தமது 90வது பிறந்த நாளையொட்டி யக்ஷகானக் கலைஞர்கள் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியில் பங்கேற்றதோடு தாமும் சிறப்பாக ஆடி அனைவரையும் ஆச்சரியப்பட வைத்தார்.

குழந்தைகளிடம் அதிக ஈடுபாடு கொண்டவர் கரந்த். அவர்களுக்காகச் சிறுவர் கலைக்களஞ்சியம், அறிவியல் கலைக்களஞ்சியம் ஆகியவற்றை உருவாக்கினார். விலங்குகளை வகைப்படுத்தி "பிராணி பிரபஞ்சத விசமாயகஜ" எனும் குறிப்பேட்டை படைத்துள்ளார்.

பட்டப் படிப்பைப் படித்திராத கரந்த், கன்னட மொழிக்காக அகராதியை உருவாக்கிச் சாதனை செய்துள்ளார். 417 புத்தகங்களை எழுதியுள்ள இவருக்குப் பல பல்கலைக் கழகங்கள் 'டாக்டர்' பட்டத்தை வழங்கியுள்ளன.

- ப. மூர்த்தி.

"எப்படியோ இன்னைக்கு ஃப்ளைட் தான்ஸா ஃப்ளைட்ல சௌதாமினி போயாச்சு... இன்னும் மூணு மாசத்துக்கு அமெரிக்கத் தமிழர்களோட உள்ளம் கொள்ளை கொண்டு, டாலர்கள் அள்ளிக் கொண்டு வரப்போறா..."

பொறாமை அவதாரம் எடுத்து வந்தாற் போல் பட்டாபியின் குரல் ஒலித்தது.

"யார் அந்த லெட்டரை எழுதியிருப்பான்னு நினைக்கறே...?" – சட்டென்று அவன்

மெய்யான கவலைக்கு மாறினான்.

அதே வேகத்தில் பவித்ராவால் அலை வரிசை மாற முடியவில்லை...

"உன்னை மாதிரி பொறாமை பிடிச்ச எவனாவது எழுதியிருப்பான் போ!"

பையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான்.

பட்டாபி நொறுங்கித் தூள் தூளானான்.

**சௌ**தாமினியின் டெலிபோன் டைரியில் நம்பர் இருந்தது. 'சங்கீதப்ரியா...' தியாகு எண்களைச் சுழற்றிப் பேசினான். ஆசிரியர் லைனில் வந்தார்.

"நான் சௌதாமினி சார்பா அவங்க ஹஸ்பெண்ட் பேசறேன். இன்னைக்குக் காலைல அவ அமெரிக்கா போயிட்டா... மொட்டைக் கடுதாசி பத்தி விசாரிச்சு நீங்க இரண்டு நாள் முன்னாடி போன் பண்ணீங்க இல்லியா...? தயவுசெய்து அதையெல்லாம் போட்டுடாதீங்க... கிழிச்சு குப்பையிலே போட்டுடுங்க..."

"நாங்க அதை அப்பவே கிழிச்சுப் போட்டாச்சு சார்... ஐயம் சௌதாமினிஸ் வெல்விஷர். அவங்க பேர்ல இருக்கற அக்கறைனால எச்சரிக்கறதுக்காகத்தான் போன் பண்ணினோம். வேற குசும்புக்காரப் பத்திரிகைக்கு இதே மாதிரி கடுதாசு எழுதியிருந்தா விஷயம் வேற விதமா மாறிடலாம் இல்லையா...?"

"இந்த விஷயம் இதோட போயிடட்டும் சார்..."

"யெஸ், தாங்க்யூ...!"

**ரா**ஜாராமன் நம்பரைத் தேடி போன் செய்தபோது நீண்ட நேரம் அடித்தது. 'வைத்து விடலாமா...?'

"அழோ... நான் ழாஜாழாமன், மிழுதங்கம் ழாஜாழாமன்..." – குழறலாகக் குரல் கேட்டது.

சட்டென்று இணைப்பைத் துண்டித்து ராஜாராமனின் வீடு தேடிப் புறப்பட்டான் தியாகு.

**'ழா**ஜாழாமன்' நிலைகொள்ளாமல் மிதந்துகொண்டிருந்தான். தியாகராஜனைப் பார்த்ததும் காலைத் தொடாத தோஷமாக வரவேற்றான்.

"அடழா... ஷொதாமினி புருஷனில்லே...? வாங்க... வாங்க..."

ஈரம் கசிந்த சுவர்களுடன் வீடு காலியாய் இருந்தது. சொற்பப் பொருள்களும் கலைந்து போய்க் கிடந்த விதத்தில் பெண் ஜன்மம் இல்லாத இடம் என்கிற பறைசாற்றல்.

தியாகராஜனின் பார்வை வேகமாக வலம்வந்தது. துப்புகளைத் தேடும் கூர்மையுடன் துழாவியது. அழுக்கைத்தான் சுரண்ட வேண்டும். அவ்வளவு வெறுமை!

"என்ன பாக்கறேன் சார்...? செஷதா... அமெரிக்கா போயிட்டாளா... பத்ஸ... நானில்லே நியாயத்துக்கு கூட போயிருக்கணும். இப்பொல்லாம் என்னைப் போட்டுக்கழுறதில்லே... அவா ஸீனியர்... ரொம்ப பெழீ....ய ஆர்டிஸ்ட்... கச்சேரிக்குப் பத்தாயிழமா பண்ணண்டாயிழமா சார்...? எனக்குத்தான் இல்லாத போச்சு... இப்படி..."

– படபடவென்று நெஞ்சில் அடித்துக் கொண்டான் ராஜாராமன்.

"ஷ்! நிறுத்துங்க..." கையைப் பிடித்தான் தியாகு.

"தண்ணி சாப்பிடற பழக்கம் உண்டு போல...?"

"சே! சே!"

"தப்பில்லே ராஜாராமன். எப்பவாவது ஒரு சமயந்தானே, வர்றீங்களா, போவோம்..."

"ஐயய்யோ! எனக்கெதுக்கு...? நீங்க ஷாப்டுங்க ஷார்... நான் கூட வரேன். ஷும்மா கம்பெனிதான்... பாவம்! ஷௌதாமினி இல்லியே... ரொம்ப லோன்லி... இல்லே.. பாவம்! வாங்க வாங்க..."

**"நான் சேர்ந்த புது கம்பெனியில் சம்பளம் தருவாங்களோ தரமாட்டாங்களோன்னு நான் பயந்தது சரியாப் போச்சு..."**

**"எப்படிச் சொல்றே?"**

**"முதலாளி அறையில் 'கடமையைச் செய். பலனை எதிர்பார்க்காதே'ன்னு எழுதியிருந்ததே!"**

**– வெ. ராஜாராமன்**



கிளம்பி வாசலுக்கே போய் விட்டான்.

சீவேரா பாரில் இரண்டு ரவுண்ட் ஸ்காட்ச் இறங்க இரண்டு மணி நேரமாயிற்று. துளித்துளியாய் உள்ளே போக, ராஜா ராமனின் ஒப்புதல் வாக்குமூலம் வெளியேறியது.

"என்னைக் கல்யாணம் பண்ணிக்கறியான்னு ஒருநாள் கேட்டுட்டேன் ஷார்... கோபம் வந்துடுத்து... எனக்கென்ன குறை...? நல்லா ஷம்பாதிக்கறேன். என் வாத்யத்து மேல ஷத்தியம்..."

மேஜையை ஓங்கித் தட்டினான்.

"ஷரி என்னைத்தான் புடிக்கல்லே.. என் வாஷிப்புக்கென்னா ஷார்... தியாகு ஷார்... அதையும் வேண்டான்னுட்டா... அவளுக்கு மட்டும் மாசத்துல முப்பத்தஞ்சு கழ்ச்சேரி... என்னைத் தூக்கியெறிஞ்சுட்டா... இப்போ யாழுமே என்னைத் திரும்பிப் பாழ்கறதில்ல..."

பொக பொகவென்று அழ ஆரம்பித்தவனை மெள்ள காருக்குத் தள்ளி வந்து ஏற்றினால், தோளைக் கட்டிக் கொண்டு இன்னும் அழுதான்.

"அந்தக் கோபத்துழதான் எழுதிட்டேன் தியாகு ஷார்.... உங்களுக்கு நான் துழோகம் பண்ணிட்டேன். மொட்டைக் கழுதாசு போட்டுட்டேன்... எனக்கு டைப்பிங் தெழியுமே.. டைப்பிங் பண்ணி..."

கடிதத்தைக் குழறி குழறி வரி பிசகாமல் ஒப்பித்தான்.

மூட்டையாக அவனைத் தூக்கி வீட்டில் இறக்கிவிட்டு வந்த தியாகராஜன், முதலில் போன் செய்தது பவித்ராவுக்குத்தான்.

(தொடரும்)

# சினிமா ஜோக்கான வீரப்பன்!

● சீமான் டைரக்ஷனில் உருவாகிக் கொண்டிருக்கும் படத்தில், ஒரு புதிய பெண் பாடலாசிரியர் அறிமுகமாகிறார். பெயர் தாமரை. கோவையைச் சேர்ந்தவர். எழுத்தாளரேதான்! விக்ரமனின் படத்துக்கும் பாடல் எழுதியிருக்கிறாராம்.

● மேயர் மு.க. ஸ்டாலினும், அமைச்சர் முல்லை வேந்தனும் கலந்து கொண்ட திரையுலக விழா ஒன்றில், சமீப காலமாக, தமிழ் படங்களுக்கு, ஆங்கிலப் பெயர் சூட்டப்படுவதைப் பற்றிக் கவலை தெரிவித்தனர். உடனே, தயாரிப்பாளர் பிரமிட் பிலிம்ஸ் நடராஜன், வசந்த் டைரக்ஷனில் தாம் தயாரித்துக் கொண்டிருக்கும் 'ரிதம்ஸ்' படத்தின் டைட்டிலை, நல்ல தமிழ்ப் பெயராய் மாற்றுவதாக மேடையிலேயே அறிவித்தார். படத்தின் புதிய பெயர்: புன்னகை என்ன விலை?

● சிரிக்கிற மாதிரி இருக்கிறதோ இல்லையோ அது தெரியாது. ஆனாலும் சந்தன வீரப்பன்தான் இன்று தமிழ் சினிமா நகைச்சுவையின் பிரதான சப்ஜெக்ட். ஒரு படத்தில், ஒருவர் ஒரு கேஸட்டைக் கொடுத்து, "இதைப் போட்டுக் கேளு! நீ எத்தனை அயோக்கியன் என்று புரியும்" என்று சொல்ல, அவர் இன்னொரு கேஸட்டை எடுத்துக் கொடுத்து, "இந்தக் கேஸட்டைப் போட்டுப் பார். நீ எத்தனை மோசமான ஆளுன்னு தெரியும்" என்பார். இதைக் கவனிக்கிற மூன்றாவது நபர், "அட சே! நாட்ல ஒருத்தனும் வாயால பேசிக்க மாட்டீங்களாடா? எல்லாம் கேஸட் தானா?" என்பார்!



● டீ.வி.யில் வரும் நிகழ்ச்சிகளில் நடத்தப்படும் எந்தப் போட்டியிலும், சினிமா சம்பந்தமான கேள்விகள் கேட்கப்படும் போது மறுநிமிடம், சென்னையில் ஒருவர் வீட்டில் டெலிபோன் அலறத் துவங்கி விடுகிறது. விடை தெரியாத சென்னைவாசிகள் போன் செய்வது பிலிம் நியூஸ் ஆனந்தனுக்குத்தான்!

● காந்தி படம் தமிழில் மொழி மாற்றம் செய்யப்பட்டு விரைவில் ரிலீஸ் ஆகப் போகிறது என்பது பழைய செய்தி. தெலுங்கில் ரிலீஸ் ஆகி விட்டது. தெலுங்கில், காந்திஜிக்குக் குரல் கொடுத்திருப்பவர் யார் தெரியுமா? எஸ். பி. பாலசுப்ரமணியம்தான்.

தொகுப்பு : கௌதம்

கல்கி கன்ஸல்டன்ஸி!




# விரயமான வரிச் சீர்திருத்தங்கள்!

புத்தாண்டை மகிழ்ச்சியுடன் வரவேற்கிற நேரத்தில், கடந்து வந்த ஆண்டையும் நாம் திரும்பிப் பார்த்து விமர்சிப்பதென்பது ஆரோக்கியமான மரபு.

கடந்த ஆண்டில் (1997) நடந்தது என்ன...? 7.5 முதல் 8 சதவிகிதம் வரை நாட்டின் மொத்த உற்பத்தி அளவு (GDP) அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. நிதியமைச்சர் சிதம்பரம் வழங்கிய பட்ஜெட் (பிப்ரவரி 28 1997) அதிகபட்சமாக வரிச் சலுகைகளையும் வரிக் குறைப்பையும் அறிவித்தது. தனியார் மட்டுமின்றி கம்பெனிகளும் ஆதாயமடையும் வகையில் பட்ஜெட் அமைந்தது.

தேவேகௌடா பிரதமர் பதவியிலிருந்து நீக்கப்பட்டபோது, இந்தச் சீர்திருத்தங்களுக்கெல்லாம் கேடு வருமோ என்ற அச்சமும் கூடவே எழுந்தது. சிதம்பரம் நிதியமைச்சராகத் தொடர்வாரா என்ற சந்தேகம்கூட எழுந்தது. இந்த பயங்களெல்லாம் தீரும் வகையில் சிதம்பரத்தின் பட்ஜெட்டை நாடாளுமன்றம் ஏற்று, ஓ.கே. செய்தது. 'ஆகா! இனி, பொருளாதாரம் முன்னேறி விடும்' என்று மகிழ்ச்சியும் எதிர்பார்ப்பும் பொங்கின. ஆனால் அவையெல்லாம் சீக்கிரமே அடங்கி ஒய்ந்து போய்விட்டன.

ஆட்சியின் ஸ்திரமின்மையால் எந்த அபிவிருத்திப் பணியையும் மேற்கொள்ள முடியாமல் அரசு திணற, அடிப்படை வசதிகள் பெருக்கம் அடிவாங்கியது. மின் உற்பத்தி, நிலக்கரி அகழ்வு, துறைமுக, சாலை வசதிகள் பெருக்கம்... எதுவுமே நடைபெறவில்லை.

செப்டெம்பர் '97 இல் கணக்கு வழக்குகளைப் பார்த்தபோது கதிகலங்கியது. GDP பெருக்கம் ஆறு சதவிகிதத்தை எட்டுவதற்கே முக்கி முனகிப் போராட வேண்டியிருந்தது.

ஆயில் பூல் கணக்குகளில் ஏராளமான தொகை துண்டு விழ, பெட்ரோல் பொருட்கள் விலையை உயர்த்த வேண்டியதாகி விட்டது.

போதாக்குறைக்கு, இத்தனை செய்த பிறகும் ரூபாயின் மதிப்பு அதலபாதாளத்துக்குச் சரிந்து போயிற்று!

எதிர்பார்த்த வரி வசூல் நடக்கவில்லை. ஆனால் சம்பள கமிஷன் சிபாரிசுப் படி அரசு ஊழியர் சம்பள உயர்வை நடைமுறைப் படுத்தியாக வேண்டும்.

இந்தக் கிடுக்கிப்பிடிகளுக்கிடையேதான் குஜ்ரால் அரசும் கவிழ்ந்து போயிருக்கிறது!

ஒரே ஒரு ஆறுதல் என்னவென்றால், இவ்வாண்டு பருவமழை பொய்க்கவில்லை என்பதால் அடுத்த ஆண்டு உணவு உற்பத்தி பெருகும்.

அமைகிற புதிய அரசு வலிமையும் ஸ்திரத்தன்மையும் மிக்கதாக அமைய வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் உங்களிடமிருந்து தாற்காலிகமாக விடைபெறுகிறேன்.

இந்த கல்கி கன்ஸல்டன்ஸி பகுதியில் மீண்டும், மகிழ்ச்சிகரமான ஒரு சூழ்நிலையில் சந்திப்போமே...

புத்தாண்டு வாழ்த்துக்கள்!

— வி. கோபாலன்

# கேரளாவில் அரிவாள் நோய்!

● டாக்டர் மதன்மோகன் வெறும் டாக்டர் மட்டுமல்ல; கோட்டயம் மருத்துவக் கல்லூரியின் முதல்வர் மற்றும் துணை முதல்வர், மேலும் குழந்தைகள் நல மருத்துவமனையின் சூப்பரின்டென்டென்ட் என்று ஏகப்பட்ட பொறுப்புகளில் இருப்பவர். அவருக்கு லஞ்சம் கொடுக்க மறுத்ததால், தமது ஒரு மாதக் கைக் குழந்தைக்குச் செய்ய வேண்டிய ஆபரேஷனைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போனார் டாக்டர் மதன் மோகன் என்று கேரள பத்திரிகையாளர் ஒருவர் தகவல் வெளியிட்டார். இது பற்றி முதல் கட்ட விசாரணை நடத்திய சட்டசபை பெட்டிஷன் கமிட்டி, அந்தத் தகவல் உண்மைதான் என்று தெரிவித்தது. கூடவே மாநிலத்தின் சுகாதாரத் துறைச் செயலாளரை மேற்கொண்டு முழுமையாக விசாரித்து அரசுக்கு அறிக்கை தர உத்தரவிட்டுள்ளது. ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு உள்ளாகியிருக்கும் டாக்டர், எப்படி இத்தனை பதவிகளில் இருக்கிறார் என்பதுதான் கேரள மக்களின் ஆச்சரியம்!




● கேரளாவிலுள்ள தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்கள் பற்றி அரசு ஒரு சர்வே எடுத்தது. அதற்காகக் கேள்வித்தாள் ஒன்றைத் தயார் செய்து, அவர்களிடம் விடைகளைக் கேட்டது. அந்தக் கேள்வித்தாளில் கடைசியாகக் கேட்கப்பட்ட கேள்வி இதுதான்: உங்கள் குடும்பத்தில், கடந்த மூன்று ஆண்டுகளில் கீழ்க்கண்ட நோய்கள் ஏதேனும் வந்துள்ளதா? காலரா, மஞ்சள் காமாலை, மலேரியா, குஷ்டம், தொற்று நோய்கள், அரிவாள் நோய்..?

எல்லாம் சரி? அது என்ன அரிவாள் நோய்? யாருக்குமே புரியவில்லை. 'அரசாங்கச் செலவில் தங்கள் தேர்தல் சின்னத்தை மக்களிடம் நினைவு படுத்துவதற்காகத்தான் கம்யூனிஸ்ட் கட்சிகள் இப்படியொரு உத்தியைக் கையாண்டுள்ளன' என்று எதிர்க் கட்சிகள் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டு விட்டன!

● திருவனந்தபுரத்திலுள்ள ஒரு கட்டடத்தின் நான்காவது மாடியில் இயங்கி வந்த கேரள போக்குவரத்துக் கழக அலுவலகம், பக்கத்திலுள்ள ஒரு கட்டடத்துக்குக் குடிபோக முடிவு செய்தது. 40 மேஜைகள், 40 நாற்காலிகள், 14 பீரோக்கள் மற்றும் ஃபைல்கள் அடங்கிய சில மூட்டைகள். இவைதான் குடிபெயர எடுத்துச் செல்ல வேண்டிய பொருள்கள். இதற்குக் கூலியாக அரசு நிர்ணயித்த தொகை ஏறத்தாழ இரண்டாயிரம் ரூபாய். ஆனால் தொழிற் சங்கம் கேட்ட தொகையோ 50,000 ரூபாய்! ஷாக் ஆகிப் போன அதிகாரிகள் லேபர் ஆபீஸர்களிடம் முறையிட, அவர்கள் வந்து சமாதானம் பேசி ஒருவழியாக 3,000 ரூபாய் என்று கூலியை நிர்ணயம் செய்தார்கள். அப்படியும் தொழிற்சங்கத்தினர் ஒரு நிபந்தனை போட்டார்கள். அதாவது நான்காவது மாடியிலுள்ள பொருள்களைக் கீழே கொண்டு வந்து வைத்து விட வேண்டும். அப்புறம்தான் தாங்கள் அவற்றைப் பக்கத்துக் கட்டடத்துக்குக் கொண்டு போக முடியும் என்றார்கள். வேறு வழி?

● வாழ்க்கை வரலாற்று நூலொன்று கேரளாவில் பரபரப்பாகப் பேசப்படுகிறது. எழுதியவர்: மலையாள எழுத்தாளரும் பத்திரிகையாளருமான டி.வி.கே. என்பவர். எழுதப்பட்டிருப்பது முன்னாள் அமைச்சரான காலஞ்சென்ற டி.வி. தாமஸின் வாழ்க்கை பற்றி.

முதன் முதலில் நம்பூதிரிபாட் தலைமையில் அமைந்த அமைச்சரவையில் டி.வி. தாமஸ் - கே.ஆர். கௌரி தம்பதியினர் அமைச்சர்களாக இருந்தனர். 'நீங்கள் அமைச்சராக வேண்டுமானால், தோழி கே.ஆர். கௌரியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும்!' என்று கம்யூனிஸ்ட் கட்சியே தாமஸை வற்புறுத்தியதாம். அதனால்தான் மணந்து கொண்டாராம். இதிலென்ன பரபரப்பு என்று ஆச்சரியப் படுகிறீர்களா? அப்படி வற்புறுத்தப்பட்ட சமயத்தில், ஆலப்புழையிலுள்ள கயிறு திரிக்கும் ஒரு பெண் தொழிலாளியிடம் தாமஸுக்குத் தொடர்பு இருந்ததாகவும் அதன் அடையாளமாக அந்தப் பெண்ணுக்கு ஒரு மகன் இருந்ததாகவும் இந்தப் புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. தொழிலாளர்களுக்காகப் போராடுவதாகச் சொல்லிக் கொள்ளும் கம்யூனிஸ்ட் கட்சியே, இப்படி ஒரு பெண் தொழிலாளியின் வாழ்க்கையைச் சீரழிக்கும் முயற்சியில் ஈடுபடலாமா என்று அந்த நூலில் விமர்சனமும் செய்யப்பட்டுள்ளது. அப்புறம் பரபரப்புக்குக் கேட்பானேன்?

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ். மணி**



தென் இந்தியாவிலேயே முதல் புத்த ஸ்தூபியை மதுரையில் நிர்மாணித்து சமாதானத் தூதுவராக மதுரை தெருக்களில் வலம் வருகிறார் ஒரு புத்த பிட்க. பெயர் இஸ்தானி.

உலகிலுள்ள இருநூற்றைம்பது முழு நேரத் துறவிகளில் இவர் ஒருவர்.

''அணுகுண்டின் தாக்குதலில் நாசகாரமாகிய ஜீவராசிகளை நேரில் பார்த்தவர்களுக்குத்தான் பரிதவிப்பின் ஆழம் தெரியும். ஜப்பான்தான் இதற்கு விரோதத்தைத் தூவியது. அங்குதான் நல்ல விதையையும் ஊன்ற வேண்டும் என்ற எண்ணம் தோன்றும்'' என்கிறார்.

டிசம்பர் மாதம் முதல் தேதியிலிருந்து 7-ம் தேதி வரை உலக அமைதிக்காக கடுமையான உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். எட்டாம் தேதி புத்தர் ஞானம் அடைந்த நாள் என்பதால் இந்த தவம். விரதத்தின்போது ஒரு சொட்டு நீர்கூட அருந்துவதில்லை. நம் நாடு வெப்பப் பிரேதசமாக இருப்பதால் சூட்டைக் குறைக்க தலையில் நீரைத் தெளித்துக் கொள்வது உண்டு. அந்த நீர் வழிந்து உதட்டில்கூடப் படக் கூடாது என்பதற்காகத் தலையை சாய்த்துக் கொள்கிறார்! தன் தவ வலிமையை சோதிக்க முழு ஊதுபத்திக் கட்டை எரிய விட்டுக் கையில் கட்டிக் கொண்டு, தியானம் செய்ய ஆரம்பித்து விடுகின்றார்! இஸ்தானிக்கு உள்ளங் கையளவு தழும்பு, கையில் இருக்கிறது.!

''நமும் யோ ஹோ ரெங் கேக்யோ'' என்ற சுலோகத்தை இசையோடு பாடிக் கொண்டு நம்ம ஊர் சேகண்டி மாதிரியான ஒரு வாத்தியத்தைத் தட்டுகிறார். தெருக்களிலும், கூட்டத்திலும் தட்டிக் கொண்டு சொல்லும் இம் மந்திரத்திற்குப் பொருள் என்ன என்று கேட்டபோது ''சொல்லக் கூடாது'' என்று புன்னகை செய்தார். கன்னியர்களை விடிகாலையில் துயிலெழுப்ப 'வன் செவி தான் நின் செவியோ' என்று ஆண்டாள் தோழிகளை இரண்டு தட்டுத் தட்டுவது நம் பக்தி இலக்கியத்திலும் உண்டுதான். இஸ்தானியின் தட்டல் வேறு விதமானது. விருதுநகர், கொடியன்குளம், சிவகாசி, ஸ்ரீவில்லிபுத்தூர் என தெருக்களில் சேகண்டி தட்டிக் கொண்டு தன்னந் தனியாகப் பயணம் செய்கிறார். 'பகலாக இருப்பதால் நீங்கள் விழித்திருப்பதாகச் சொல்ல முடியாது. மன இருளிலிருந்து விழியுங்கள்' என்று தட்டுகிறாரோ என்னவோ?

சிங்களவருக்கும் தமிழர்களுக்கும் பகையை மூட்டி விட்டதில் புத்த குருமார்களுக்குப் பங்கு உண்டு என்பது பரவலான கருத்து. இலங்கைத் துறவிகளின் இனப் பற்றினால் ஏற்பட்ட அவப் பெயரைத் துடைக்க இஸ்தானியும் யொ ர காட் சுகாவும் தலைமையேற்று யாழ்ப்பாணத்தில் அமைதிப் பேரணி நடத்தியுள்ளனர்.

''1984 அக்டோபர் 26-ம் நாள் யாத்திரிகர்களை சிங்களவர்கள் தடுத்துள்ளார்கள். மீறி எட்டு வைத்ததும் யொ ர காட் சுகாவின் முகத்தில் ஒருவன் தாக்கினான். அமைதியாக நின்ற காட் சுகா 'உங்களுக்குத் தலை தாழ்த்தி மரியாதை செலுத்துகிறேன்' என்றார். பின் அவன் ஒன்றும் செய்யவில்லை. மூன்றாம் நாள் பயணத்தின் போக்கிலேயே சிங்கள இன வெறி

# "மதுரைதான் என் ஜப்பான்!"

## —புத்த பிட்சு இஸ்தானி பேட்டி

யர்கள் காட்சுகாவை சரமாரியாகச் சுட்டனர்.

"அவரை நான் என் நெஞ்சில் சாய்த்துக் கொண்டபோது, 'அமைதிக்காக என் உயிரைத் தந்தேன் என்பதால் சந்தோஷமாகவே இருக்கிறது' என்றார்." – நடந்ததை நினைவு கூறும் இஸ்தானி, இரு பக்கமும் தவறு இருப்பதாகச் சொல்கிறார்.

விடுதலைப்புலிகளுக்கு புத்த பிட்சுகள் மேல் தீராத கோபம் உண்டு. தமிழர் தெருக்களில் சேகண்டியை அடிக்கப் புலிகள் அனுமதிக்கவில்லை.

"புலிகள் போன பின் தமிழர் தெருவில் நடப்பேன். தமிழ்ப் பெண்கள், குழந்தைகள், யாருக்கும் தெரியாமல் எனக்குப் பிச்சை போடுவார்கள். குடிக்கத் தண்ணீர் கொடுப்பார்கள். ஒரு சமயம் மந்திரத்தை ஒலித்தபடி தெருவில் நடந்தபோது புலிகள் மறித்துக் கொண்டனர். ஒரு எட்டு வைத்தாலும் சுட்டு விடுவோம் என்றார்கள். நான் காலை மெதுவாகத் தூக்கினேன். டமடமவென்று ஓசை. என் தலைக்கு மேல் சரமாரியாகக் குண்டுகள் பறந்தன. அமைதியாக நின்றேன். என்ன நினைத்தார்களோ, என்னை விட்டு விலகி நின்றார்கள்."

இலங்கையில் இஸ்தானி தங்கி இருந்த விபோதமலை வித்தியாசமானது. இம் மலையின் உச்சியிலுள்ள பாத அடையாளம் புத்தருடையது என பௌத்தர்கள் நம்புகின்றனர். சிவனொளிப் பாதம் என இந்துக்கள் விளக்குகிறார்கள். ஆதாமின் மலை முடி என கிறித்துவர்களும், இசுலாமியரின் ஆன்மீக இடம் என்றும் கூறிக் கொள்கின்றனர்.

மதுரையில் ஸ்தூபி எழுப்ப இவரது குரு பியூஜி விரும்பியதால், இஸ்தானி இங்கு கட்டியுள்ளார். தினமும் மாலை வேளையில் தியானம் நடைபெறுகிறது. பெரிய பிஸினஸ் மேனாக இருந்தவர் இஸ்தானி! 'ஜப்பான் அபாரமான இயந்திரங்களை உலகுக்குக் கொடுத்து விட்டு, வாழ்வோடு உறவாடுகிற ஆன்மீகத்திற்குப் பங்கு இல்லாமல் செய்யப் போகிறது' என்ற குருஜியின் பொன் மொழி தான் இவரை துறவியாக்கி இருக்கிறது. தமது அறிவைக் கொண்டு மிக மிக எளிமையாக வாழ்வது எப்படி என்பதற்கு இஸ்தானி ஓர் முன் உதாரணம்.

தனக்கு முக்தி கிடைக்கத்தான் பெரும்பாலான குருமார்கள் விரும்புகின்றனர். மக்களுக்கு முக்தி கிடைக்கட்டும் என்று விரும்புவதில்லை. மக்களுக்கு முக்தி கிடைக்க நம்மை இழக்க வேண்டும் என்பதில் இஸ்தானி தீவிரமாக இருக்கிறார். (நம் ராமானுஜர் ஞாபகம் வருகிறதா?)

"புத்த மதத்தில் மிக முக்கியமான பகுதி தாமரை சூத்திரம்தான். எந்த சமயத்தையும் தூற்றக் கூடாது. அடுத்த சமயத்தை நம் சமயம் போல நேசிக்க வேண்டும். இதை கடைப் பிடிக்க முயல்கிறோம்" என்கிறார்.

மதுரை மக்கள் பிட்சையாக இடும் உணவை உண்டு சந்தோஷிக்கும் இஸ்தானியிடம் "எப்போது ஜப்பான் போகப் போகிறீர்கள்?" என்றோம். "ஒரு போதும் மதுரை மக்களை விட்டுச் செல்ல மாட்டேன். மதுரைதான் என் ஜப்பான்" என்றதும் காரணத்தைக் கேட்டோம். சோகமும் இன்பமும் முகத்தில் மாறி மாறித் தோன்றியது.

"ஜப்பான் நூறு வருடத்திற்கு முன்பே மனிதனை நேசிப்பதைத் தொலைத்து விட்டது. எத்தனையோ ஜப்பானியர்கள் இந்தச் சாலை வழியாக போகிறார்கள். ஒருவர்கூட நம் ஸ்தூபி இங்கே இருக்கிறதே என்று திரும்பிப் பார்ப்பது கிடையாது. என்னைப் பார்த்தால் வணக்கம் சொல்வதைக் கூடக் கை விட்டு விட்டனர். மதுரை மக்கள் ஆன்மீக ஒழுக்கத்தை அதிக ஈடுபாட்டோடு கடைப்பிடிக்கின்றனர். தெருவில் நடந்தால் சிறு குழந்தைகூடக் கை எடுத்து கும்பிடுகிறது. மியூசியம் வரும் பெண்கள் ஒரு நொடி நின்று ஸ்தூபியை வணங்கி விட்டுப் போவதைக் காணும்போது வரும் ஆனந்தம், ஜப்பானில் கிடைக்காது. மசூதியைப் பார்த்தாலும் வணங்குகிறார்கள். சர்ச்சைப் பார்த்தாலும் வணங்குகிறார்கள். மதம் துறவிகளிடம் இல்லை. மக்களிடம் இருக்கிறது என்று உணர்த்துகிறார்கள் இந்துப் பெண்கள். நான் ஒருபோதும் அவர்களை மதம் மாறுங்கள் என்றும் சொல்ல மாட்டேன்" என்கிறார்.

**— சு. வேணுகோபால்**

படம்: **சங்கரலிங்கம்**

மும்பை மசாலா

# மும்பையில் பரவும்

## வந்து விட்டது 'எலெக்ஷனேரியா'....

கொசுத் தொல்லை அதிகரிக்கும் காலங்களில், சாதாரண ஜலதோஷம்கூட 'மலேரியா'வாகத்தான் தெரியும்! கிட்டத்தட்ட அதே நிலையில் தேர்தலுக்கான அறிகுறிகள் தென்பட ஆரம்பித்த உடனேயே 'எலெக்ஷனேரியா' ஜுரம் ஜிவ்வென்று ஏறத் தொடங்கி விட்டது. மனோகர் ஜோஷி, பிரபல தொழிலதிபர் காந்திகுமார் போதார் அளித்த விருந்தில், ஹிந்துஜா, கோயங்கா, ரூயா, சோமையா, பஜாஜ் போன்ற தொழில் பெருந்தலைகளுடன் 'ஜல் ஜீரா' அருந்தி, அளவளாவினார். உடனே 'எல்லாம் தேர்தல் நிதிக்காக... பாசாங்கு' என்றார்கள். இடிந்து விடும் நிலையிலுள்ள பழைய கட்டடங்களில் உள்ளவர்களுக்கு, புது வீடுகளைத் தருகிறேன் என்றார். 'க்கும்... எல்லாம் வோட்டுக்காக' என்றார்கள். மும்பையின் புது ஷெரீஃபாக குல்வந்த் சிங் கோஹ்லியை நியமித்ததற்கு, 'எல்லாம் தேர்தல் சமயத்தில் சீக்கியர்கள் ஆதரவைப் பெற!' என்கிறார்கள். ஹூம்! வோட்டுப் போட்டே சலித்தவன் கண்களுக்கு நடப்பதெல்லாம் தேர்தல்தான்!

## 'கோ'... கலே... வழியில்...

இதோ அதோ என்று பயமுறுத்திக் கொண்டிருந்த "mayor - in - council" முறை, கடைசியில் வந்தே விடும் போலிருக்கிறது. வரும் ஏப்ரல் ஒன்றிலிருந்து, மும்பை நாக்பூர் இரண்டு கார்ப்பொரேஷன்களிலும், இம்முறையை அமல்படுத்தப் போகிறார்களாம். ஒரு மேயர், ஒரு டெபுடி மேயர், பதினொரு கவுன்சிலர்கள் கொண்ட ஒரு காபினெட், அதிக உரிமைகளுடனும் அதிகாரங்களுடனும் செயல்பட இருக்கிறது. ஆனால் மும்பை முனிசிபல் கமிஷனர் கோகலேவுக்கு இது ரசிக்கவில்லை! அதிகாரங்கள் குறைந்து, சிறகொடிந்த பறவையாகத் தாம் தவிப்பதைவிட ராஜினாமா செய்து விடுவது மேல் என அவர் குமுறுகிறார். "அதிகாரமிருந்தபோது இவர் எதைச் சாதித்து விட்டார்? மும்பையின் போக்குவரத்துப் பிரச்னைக்குக் காரணமே இவரது மெத்தனம்தான்" என்று கோகலேவை எதிர்த்து நவால்கர் உரத்த குரலில் பேசி வருகிறார். இவர் இவ்வளவு வெளிப்படையாகத் தாக்குகிறாரென்றால், நிச்சயம் அதற்கு தாக்கரேவின் ஆசீர்வாதம் இருக்குமென்றும், அதனால் கோகலேவுக்கு "கோ... கோ" சொல்லும் காலம் தூரமில்லை என்றும் சொல்கிறார்கள்.

## வாசி(ஷி)க்க முடியாத கடிதங்கள்

வாஷியிலிருக்கும் யாருக்காவது கடிதம் அனுப்ப உத்தேசமா? பேசாமல் பாத யாத்திரை மேற்கொள்ளுங்கள்! நீங்கள் எழுதி, கடிதம் அவர்களுக்குப் போய் சேருமுன், (வயசான கோலத்திலாவது) நீங்கள் அங்கே சென்று சேர்ந்து விடுவீர்கள். வாஷி போஸ்ட் ஆபீசில், லட்சத்திற்கும் மேலான கடிதங்கள் மூட்டை மூட்டையாகக் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. 'இந்த ஏரியாவுக்கு 40 போஸ்ட்மேன்கள் போதாது; இரண்டு மடங்கு வேண்டும்' என தபால்காரர்கள் ஸ்டிரைக் செய்வதுதான் காரணம். தீபாவளி சமயம் பார்த்து, "எக்ஸ்ட்ரா ஹாண்ட்லிங் சார்ஜஸ்" என அவர்களுக்கு 'எக்ஸ்ட்ரா'வாகத் தினமும் கிடைத்துக் கொண்டிருந்த ரூ 3.5, திமர் 'கட்'டானது பிறிதொரு முக்கிய காரணம்! டெலிஃபோன் பில், இண்டர்வியூ கார்டுகள் போன்று முக்கிய கடிதங்களும் உரிய காலத்தில் கிடைக்காமல் திண்டாடும் பொதுமக்களின் குறைகளை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. தீபாவளி வாழ்த்துக்கள் இப்போதுதான் பட்டுவாடா

### அக்கரையைப் பாருங்க!

பெர்த் நகரில் நடைபெற்ற உலக தடகளப் போட்டிகளில் "EPO சோதனை"யில் தகுதி பெற்றவர்கள் மட்டுமே விளையாட அனுமதிக்கப் பட்டார்கள். போதை மருந்தை உட்கொண்டார்களா என்பதை அறிய நடத்தப்படும் வழக்கமான சிறுநீர் சோதனை அல்ல இது. ரத்தப் பரிசோதனையின் மூலம் மட்டுமே கண்டுபிடிக்கக் கூடிய அத்துமீறல் இது. EPO என்று சுருக்கமாக அழைக்கப்படும் "எரித்ரோ போயாடேன்" எனும் பொருள் ஒரு விதத்தில் ரத்தத்தில்



• மனோகர் ஜோஷி

அன்ஜீமன்-இ-இஸ்லாம் ஸ்கூலுக்குள் நுழைந்த மாணவர்களுக்கு ஒரே ஷாக்! ஸ்கூலுக்கு வந்திருக்கிறோமா, சலூனுக்கா என்று ஒரே குழப்பம்! விளையாட்டு மைதானத்தில், 7,8,9 வகுப்புகளைச் சேர்ந்த சில மாணவர்கள் கதறக் கதற, அவர்கள் அருமை பெருமையாக வளர்த்த ''ஷாருக்கான்'' ''ஸஞ்சய்தத்'' ஸ்டைல் சுருள் முடிகளை எல்லாம், முடி திருத்தும் தொழிலாளி ஒருவர் தம் கத்தரிக் கோலுக்கு இரையாக்கிக் கொண்டிருந்த காட்சி, அவர்களை ஸ்தம்பிக்க வைத்தது. ''எண்ணெய் விட்டா வளர்த்தோம்... சர்வேசா... இம் முடியைக் கண்ணீரால் காப்போம்... வெட்டத் திருவுளமோ'' என்று கோரஸாக மாணவர்கள் அலற, ''நாளை ஒரு கல்யாணம்; அதுவரையிலாவது விட்டு வையுங்களேன்'' என ஒரு பிஞ்சு, தலை முடியைப் பிடித்துக் கொண்டு கெஞ்ச... ''எத்தனையோ முறை

# ஏலேக்ஷேணோரியா!

செய்யப்படுகின்றனவாம். புது வருடத்திற்கு வாழ்த்துகள் அனுப்பினால், 21-ம் நூற்றாண்டின் துவக்கத்திலாவது சென்று சேர்ந்து விடாதா என்ன?

### தலைக்கு வந்தது

அண்மையில், வி.டி. அருகிலுள்ள,

சொல்லியும் நீங்கள் கேட்காததால்தான் பி.டி. டீச்சர்கள் முடி திருத்துபவரை இங்கேயே வரவழைத்து விட்டார்கள். கன்னா பின்னாவென்று சினிமா ஸ்டைலில் நீள முடி வளர்த்துக் கொள்வதெல்லாம் பள்ளி ஒழுங்கு முறைக்குப் புறம்பானது'' என 'டரிம்'மாக 'முடி'த்து விட்டார் பிரின்சிபல் ரெஹனா சலாமத்!

மும்பையிலிருந்து: ஜெயஸ்ரீ ராஜ்

உள்ள சிவப்பணுவின் தன்மை வாய்ந்தது. இதை உட்கொண்டால் பந்தயத்தின் போது உடலுக்கு அதிகப்படி ஆக்ஸிஜன் கிடைத்து, வேகத்தை அதிகரித்துக் கொள்ள முடியும்.

செவ்வாய் கிரகத்தில் வெற்றிகரமாகச் சோதனைகள் நடைபெறுவதை உலகமே மகிழ்ச்சியுடன் பாராட்டிக் கொண்டிருக்க, ஏமன் நாட்டைச் சேர்ந்த இரண்டு பேர் அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி நிறுவனமான ''நாஸா''வின் மீது வழக்குத் தொடுத்திருக்கிறார்கள். ''எங்கள் முன்னோரிடமிருந்து நாங்கள் சாஸனமாகப் பெற்றது செவ்வாய் கிரகம். இதில் எங்கள் அனுமதியில்லாமல் அமெரிக்கா ஆராய்ச்சிகளைச் செய்வது அத்துமீறல் ஆகும்'' என்று மிகவும் சீரியஸாக கூறுகிறார்கள்.

கஸாகஸ்தான் அணியுடன் விளையாடி சமீபத்தில் தோல்வி கண்டது இராக் கால்பந்து அணி. உடனே இராக் கால்பந்து கூட்டமைப்பின் தலைவர் அந்த அணியின் உறுப்பினர்களை தன் கையாலேயே மொத்தித் தீர்த்திருக்கிறார். இந்தப் பதவியை வகிப்பவர் உதே உசேன் – சதாம் உசேனின் மகன்.

– குல்லூ



# தீப்பொறி

தில்லியில் எம்.பி. ஒருவரைக் கொலை செய்ய முயன்ற ஜிம்மியை சல்லடை போட்டுத் தேடுகிறது போலீஸ். இந்த வலையில் சிக்கு கிறது ஒரு அப்பாவிக் குடும்பம். தீவிரவாதிக்கு அடைக்கலம் கொடுத்ததாக நம்பி, ஜஸ்ஸி என்ற இளைஞனை இழுத்துச் சென்று சித்திர வதை செய்கிறது போலீஸ். அவனது சகோ தரி வீரான் துடித்துப் போக, அவளது காத லனும் ஜஸ்ஸியின் ஆருயிர் நண்பனுமான கிருபால் நீதி கேட்கப் புறப்படுகிறான். சந் தர்ப்ப சூழலால் அவனே தீவிரவாதி ஆகிறான்.

"மாச்சிஸ்" என்ற பெயரில் வெளிவந்த இந் திப் படத்தின் தமிழாக்கம்தான் இது. என்றா லும் டப்பிங்கில் 'பிடிவாதம்' இல்லாத நேர்த்தி. குல்சார் இயக்கத்திலும் கொடி கட்டிப் பறக்கிறார். கதையில் காதல், சேஸிங் எல்லாமே உண்டு. என்றாலும் தீவிரவாதி களின் சாம்ராஜ்யத்தை அவர் சித்திரிக்கும் போது முகத்தில் யாரோ நேராகக் குத்து விடு வது போன்ற ஓர் உணர்வு ஏற்படுகிறது. தீவிர வாதிகளுக்கு வக்காலத்து வாங்குவது போல் காட்சிகள் அமைந்திருக்கின்றனவே என்ற சந்தேகம் மனதில் தொடர்ந்து எழுகிறது. என்றாலும் அவர்களுக்குக் கொள்கைதான் முக்கியம். மனிதத்தனம் மற்றும் உணர்வுகள் எல்லாம் ஒரு பொருட்டே அல்ல என்பதை அடிக்கோடிடும் சில காட்சிகள் பாலன்ஸ் செய்துவிடுகின்றன.

சிறந்த நடிகை விருதை தபுவுக்கு பெற்றுக் கொடுத்த படம் இது. குழுவினரைக் குற்றம் கூற முடியாத அளவுக்குச் சீரான நடிப்பு - முக்கியமாக போலீஸிடம் சிக்கிக் கொண்டு சித்திரவதைப்படும் தன் காதலனுக்கு விஷத்தைக் கொடுத்துவிட்டு, கல்க்கத்துடன் வெளியேறும் காட்சி.

இந்திப்பட ரசிகர்களின் இன்றைய கனவு நாயகனான சந்திரசூர் சிங்கிற்கு இதுதான் முதல் படம். லேசாக பிரதாப் போத்தன் ஜாடை. அசடுவழியாமல் நறுக்கென்று நடித்திருக்கிறார்.

"தீவிரவாதிகள் உருவாக்கப்படுகிறார்களே தவிர பிறப்பதில்லை'' என்ற வழக்கமான இழைதான் என்றாலும் அந்த வழியில் செல்பவர்களுக்கு ஆபத்து எதிர்த்தரப் பிலிருந்து மட்டுமல்ல என்பதையும் பிராக் டிகலாக எடுத்துச் சொல்கிறார். விஷாலின் இசையமைப்பு படத்திற்குப் பக்கபலம். படம் முடிந்து டைட்டில்கள் திரையில் தோன்றும்போது நெஞ்சைப் பிழியும் இசை. சில திரைப்படங்கள் நம்மை பாதிக்காமல் விடாது. அப்படி நம் மனத்தில் 'பற்றிக்' கொள்ளும் படம்தான் தீப்பொறி.

— ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623;
Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

# கண் சிமிட்டும் நேரத்தில் உங்கள் குழந்தை வளர்ந்து விடுவாள்



## அதே வேகத்தில் உங்கள் பணம் வளர்ந்திட




காலங்கள் மாறினாலும் சில கடமைகள் மாறுவதில்லை. உங்கள் செல்ல மகளின் திருமணம்–உங்கள் தலையாய கடமைகளில் ஒன்று. அதற்கு கரூர் வைஸ்யா வங்கியின் திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்வதே நன்று.

இந்திய தனியார் வங்கிகளுள் முதலாவதாகத் தேறியுள்ள கரூர் வைஸ்யா வங்கியின் நூறு சதவீத பாதுகாப்புடன்!

இன்றே திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்யுங்கள். உங்கள் மகளின் திருமணத்தை நிறைவாக நடத்துங்கள்.




Since 1916

**கரூர் வைஸ்யா பாங்க் லிட்.**

கரூர் – 639 002

A.D.நவநீதன்
சேர்மன்

**நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி**

Anugrah 2484/97 Tam

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392/ 97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka